ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீ பராசர பட்டர் அருளிச்செய்த

# அஷ்டச்லோகீ

எளிய தமிழ் விளக்கம்



ஸ்ரீ பராசரபட்டர் - ஸ்ரீரங்கம்

ஸம்ப்ரதாயரத்நம் ஸ்ரீவைஷ்ணவ ஸிம்ஹம்
Dr. V.V. ராமாநுஜன்
(ஆசிரியர் - யதிராஜ பாதுகா)

ஸ்ரீரங்கப்ரியா பதிப்பகம் : திருவல்லிக்கேணி, சென்னை - 5.

ஸ்ரீ :
ஸ்ரீமதேராமாநுஜாய நம:
மொழியைக்கடக்கும் பெரும்புகழான் நம் கூரத்தாழ்வான்
திருக்குமாரர்

ஸ்ரீ பராசரபட்டர் அருளிச்செய்த

# அஷ்டச்லோகீ

தமிழ் விவரணம்

ந்யாயவேதாந்த வித்வான் ஸ்ரீ உ.வே.காரப்பங்காடு
வேங்கடாசார்ய ஸ்வாமி ஸாதித்தருளிய
உபந்யாஸங்களின் தொகுப்பு.

எழுதியவர்:
ஸம்ப்ரதாயரத்நம், ஸ்ரீவைஷ்ணவ ஸிம்ஹம்
**Dr. V. V. ராமாநுஜன்**
பேராசிரியர் (ஓய்வு) சென்னை பல்கலைக்கழகம்
ஆசிரியர், யதிராஜபாதுகா.

ஸ்ரீகாரப்பங்காடு ஸ்வாமி சதாப்தி நினைவு வெளியீடு

**ஸ்ரீரங்கப்ரியா பதிப்பகம்**
68, டி.பி.கோயில் தெரு
திருவல்லிக்கேணி, சென்னை - 5
☎ 2844 2441

மார்ச் - 2006



விலை ரூ. 30.00

(This book is published with the generous financial aid provided by the Karapankadu Venkatachariar swamy Memorial Foundation established by th members of Swami's family)

Printed by :
RNR Printers & Publishers,
19, Thandavarayan Street,
Triplicane, Chennai - 600 005.
Ph : 2844 1856

Tca Venkatesan
236 Bellshire Ln
Rochester Hills, MI 48307



ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## அடியேன் செய்யும் விண்ணப்பம்

ஸ்ரீவைஷ்ணவக்குடியில் பிறந்தவனை உண்மை வைஷ்ணவனாக்குவது ஸதாசார்ய ஸம்பந்த்தினால் திருமந்த்ராதி ரஹஸ்யத்ரயத்தையும் உபதேசமாகப் பெறுவதே. இந்த மந்திரங்களின் அர்த்தஜ்ஞாநம் மிகவும் அவசியம். நமக்குக் கிடைத்துள்ள முதல் மந்தரார்த்த விவரணம் எம்பெருமானார் பேரருளுக்குப் பூரண பாத்திரமான ஸ்ரீபராசரபட்டர் அருளிச்செய்த எட்டு ஸம்ஸ்க்ருத ச்லோகங்களடங்கிய அஷ்டச்லோகீ எனும் நூலே. இந்த அஷ்டச்லோகீ-க்கு ஸ்ரீப்ரதிவாதிபயங்கரம் அண்ணா (ஸ்ரீமணவாளமாமுனிகளின் அஷ்டதிக்கஜங்களில் ஒருவர்) அருளிய வ்யாக்யானமே ப்ரஸித்தமாக உள்ளது.

கீர்த்திமூர்த்தி மஹாவித்வான் ஸ்ரீ உ.வே. காரப்பங்காடு ஸ்ரீவேங்கடாசார்யஸ்வாமி திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்தஸாரதி ஸந்நிதியில் 1968ம் ஆண்டு இந்த நூலில் பொதிந்துள்ள பொருள்களை 10 உபந்யாஸங்களில் ஸாதித்தருளிய போது எடுத்த குறிப்புக்களின் விரிவாக்கமே இந்த அஷ்டச்லோகீ விவரணம். யதிராஜபாதுகா இதழ்களில் (1986) தொடர்க்கட்டுரைகளாக வெளிவந்து பெரியோர்களின் பாராட்டைப் பெற்றது. இந்த விவரண நூலில் இருக்கக்கூடிய குறைகளுக்கு அடியேனே பொறுப்பாளி. 'நம்பையல்' என்று அடியேனை அபிமானித்தருள வேணும்.

நீண்டகாலம் ஸ்ரீஸ்வாமியின் அந்தேவாஸிகளிலொருவனாக இருந்து அடியேன் பெற்ற பயனை உங்களுடன் பகிர்ந்து கொண்டு ஸத்தை பெறுகிறேன். ஸ்வாமியின் சதாப்தி ஆண்டில் வெளிவரும் பல நினைவு மலர்களில் இதையும் ஒன்றாக அபிமானித்தருள ப்ரார்த்திக்கிறேன்.

'ஸ்ரீநிவாஸரங்கம்'
68, தெளிசிங்கப்பெருமாள் கோயில் தெரு,
திருவல்லிக்கேணி
சென்னை - 600 005
பங்குனி 2006

யதிராஜபாதுகாதாஸன்
V.V. ராமாநுஜன்

ஸ்ரீ :

ஸ்ரீமதேராமாநுஜாய நம:



ஸ்ரீ பராசரபட்டர் அருளிச்செய்த

# அஷ்டச்லோகீ

முன்னுரை

**ஸ்ரீபராசரபட்டார்ய : ஸ்ரீரங்கேசபுரோஹித: |**
**ஸ்ரீவத்ஸாங்கஸுதஸ்ரீமாந் ச்ரேயஸே மேஸது பூயஸே ||**

ஸ்ரீவத்ஸாங்கர் என்ற திருநாமத்தையுடைய ஸ்ரீகூரத்தாழ்வானின் திருக்குமாரரும், அவ்வுறவினால் பெற்றசெல்வமான நம்பெருமாளின் பௌரோஹித்ய கைங்கர்யமான செல்வத்தையுடையவருமான ஸ்ரீ பராசரபட்டர் அடியேனுடைய ச்ரேயஸ்ஸுக்கு (ஆத்ம நலனுக்கு) ஆகுவராக.

ஸ்ரீவைஷ்ணவர்கள் தாய்வயிற்றில் பிறப்பினாலேயே வைஷ்ணவர்களாக மாட்டார்கள். ஒரு ஸதாசார்யனைப்பற்றி பஞ்சஸம்ஸ்காரம் எனப்படும் ஐந்து ஸம்ஸ்காரங்களையும் பெற்றபிறகே வைஷ்ணவத்வ ஸித்தி ஏற்படுகிறது. "ஜந்மநா ஜாயதே சூத்ர: கர்மணா ஜாயதே த்விஜ : " என்றொரு தர்மசாஸ்த்ரவசநம். பிராம்மணன் பிறப்பினாலேயே பிராம்மணனாகமாட்டான். வைதிக ஸம்ஸ்காரங்களினால் முக்கியமாக, உபநயன ப்ரஹ்மோபதேசத்தினால் ப்ராம்மண ஜன்மத்தைப்பெறுகிறான். இதுபோலவே வைஷ்ணவ ஜந்மாவும். பஞ்சஸம்ஸ்காரங்களில் முக்கியமான மந்த்ரஸம்ஸ்காரம் ஜ்ஞான ஜன்மத்தைப் பெற்றுத்தருகிறது. இந்த ஸம்ஸ்காரத்தில் ஆசாரியன் உபதேசிக்க, சிஷ்யன் மூன்று ரஹஸ்ய மந்த்ரங்களையும் பெற்று உச்சரித்து, இவற்றின் பொருளையும் அவ்வாசாரியனின் மூலமாகவே, அறியப்பெறுகிறான். இப்படி அறிவு பிறப்பதை ஜ்ஞாநஜந்மா என்பர். இவற்றினால் அறிவது ஜீவபரபேதமும், ஜீவபரஸம்பந்தமும். ஜீவாத்மா, பரமாத்மா இருவரும் நித்யர்கள். ஆனால் ஜீவாத்மாவுக்கு சரீரஸம்பந்தமாகிற பிறப்பும், அதை விடுவதான இறப்பும் உண்டு. இது ஏற்படுவது ஜீவனின் கர்மமடியாக. இவை சாஸ்த்ர ஸம்மதமான அர்த்தங்கள். இந்த வைஷ்ணவஜந்மாவுக்கு மந்த்ரம் மாதா ; ஆசார்யன் பிதா.

ஜீவபரஸ்வரூபங்களை உள்ளபடி அறிவது மந்த்ரோபதேசத்தின் பலன். சாஸ்த்ரஸாரமான ஜ்ஞானத்தைப் பெறுவதே ஸ்ரீ வைஷ்ணவ ஜந்மா (பிறப்பு) பெறுதலாகும். இந்த ஜ்ஞானம் பிறப்பதற்கு முன் 'அன்று நான் பிறந்திலேன்' என்ற திருமழிசைப்பிரான் திருவாக்குப்படி பிறந்தும் பிறவாத நிலை. நம்மாழ்வார் திருவவதாரத்துக்கு ஸ்ரீ மதுரகவிகளின் அவதாரம் அருணோதயமாம். ஆழ்வாரின் அவதாரத்தை வகுளபூஷண பாஸ்கரோதயம் என்பர். இந்த ஜோதியை வடநாட்டிலிருந்த மதுரகவிகள் கண்டு அதையே குறியாகக் கொண்டு திருக்குருகூரையடைந்து ஆழ்வாரை ஸேவித்து, 'ரூபமேவ அஸ்யமஹிமாநம் தர்சயதி' என்கிறபடியே கண்ட உடனே ஆழ்வாரின் பெருமையை உணர்ந்துகொண்டு' தான் பிராம்மணனாயினும், ஞானமுள்ளவராயினும் ஆழ்வாரை தெண்டனிட்டு ஒரு கேள்வி கேட்டார். "செத்தத்தின் வயிற்றில் சிறியது பிறந்தால் அது எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?" என்று மதுரகவி கேட்க, ஆழ்வார், "அத்தைத் தின்று அங்கே கிடக்கும்" என்று பதிலருளிச் செய்தார். 'செத்தது' என்பது ஜடமான உடல். ஜ்ஞானசூன்யம் என்று கருத்து. சிறியது என்பது அணுமாத்ரமான ஜீவன். பிறப்பு என்பது இவ்விரண்டுக்கும் ஏற்படும் ஸம்பந்தம். 'பிறந்தால்' என்பதிலுள்ள 'ஆல்'- பிறக்குமாகில்- என்று நடவாதது நடந்தால் என்னுமாபோலே 'அரிது' என்பதைக் குறிக்கும். இங்கு குறிக்கப்படும் பிறப்பு ஞானஸம்பந்தமே, ஸ்வரூபஜ்ஞானம் பெறுவது அரிதினும் அரிதாம். ஸ்வரூபயாதாத்ம்ய ஜ்ஞானம் - உள்ளபடி தெளிவாக அறிகை யாரோ சிலருக்கு பாக்யவசத்தால் ஏற்படுவதொன்று. பேயாழ்வாரினருளினால் திருந்திய திருமழிசைப்பிரான் "எம்பெருமான் அர்ச்சாஸ்தலங்களில் கோயில் கொண்டிருந்தது நான் பிறவாதபோது; இப்போது அவன் நின்றதும் இருந்ததும் கிடந்ததும் என் நெஞ்சுளே" என்கிறார். இங்கு பிறப்பு என்பது திருமந்த்ர ஜ்ஞானம் பெற்றமையையே.

எம்பெருமான் சேஷி-ஸ்வாமி; நாம் (ஜீவர்கள்) அவனுக்கு சேஷம் (உடைமை). அர்ச்சாஸ்தலங்களில் எம்பெருமான் இருப்பது தன் ஸொத்தான நம்மைப்பெறுகைக்காக. ஸொத்து கர்மாநுகுணமாக விலகி இருந்தாலும் உடையவனான அவன் விலகியிருக்கமாட்டாமல் வந்து கிடக்கிறான். "என்னைத் திருத்திப் பணி கொள்வதற்காக பல தலங்களிலும் நின்றும் இருந்தும் கிடந்தும் வர்த்தித்தான். அது நானில்லாத முன்பெல்லாம்; நான் பிறந்த பிறகு-அடியேன் திருந்தி ஸ்ரீவைஷ்ணவனாயின பின்பு அவன் இருப்பது என் நெஞ்சுளே. அன்று நான் பிறந்திலேன் - பிறந்தபின் மறந்திலேன் (திருச்சந்த - 64). அவன் இவர் நெஞ்சில் குடிகொண்டமையால் மறப்பதற்கு வாய்ப்பில்லை. திருமந்த்ரத்தில் சொல்லப்படும் ஸ்வரூபஜ்ஞானம் உண்டாகாத போது ஜீவன் உடலிலிருந்தும்

பிறந்ததாகமாட்டாது. ஆசார்யன் க்ருபையடியாக ஞானம் பிறந்த பின்னரே பிறந்தவனாவோம். *முத்தனார் முகுந்தனார் நம்முள் மேவினார்-எத்தினால் இடர்கடல் கிடத்தி ஏழைநெஞ்சமே? (திருச்சந்த-115) என்கிறார் ஆழ்வார்.

நாதமுனிகள் முதலாக நமதாசாரியர்களனைவரும் திருவஷ்டாக்ஷர மஹாமந்த்ரஜ்ஞானம் தமக்கு ஏற்பட்ட பின்னரே தம்மைப் பிறந்தவராக எண்ணி இதைக் கொண்டே காலக்ஷேபம் பண்ணிப்போந்தனர். பகவான் ஸ்வாமி, நாம் அவன் ஸொத்து என்ற அறிவு வேறூன்றியிருக்கவேணும். இப்படி ஞானம் பிறப்பதில் (ஜ்ஞானஜந்மாவான பிறவி) திருமந்த்ரம் மாதா, ஆசார்யன் பிதா. இந்த ஜ்ஞான ஜன்மமே பிறப்பு என்பது நமது ஸம்ப்ரதாயத்தில் ஒரு முக்கியமான அர்த்தமாகும்.

நமது ஆசார்யாரம்பரையில் ப்ரதமாசாரியன் பெரிய பெருமாள் (ஸ்ரீரங்கநாதன்). பிறகு முறையே பெரியபிராட்டியார் (ஸ்ரீரங்கநாச்சியார்), சேனைமுதலியார், நம்மாழ்வார், நாதமுனிகள், உய்யக்கொண்டார், மணக்கால்நம்பி, ஆளவந்தார், பெரியநம்பி, எம்பெருமானார் என்று ஆசார்யபரம்பரை அமைந்துள்ளது. எம்பெருமானார் 74 ஸிம்மாஸனாதிபதிகளை நியமித்து அவர்கள் மூலமாக இந்த ஞானபரம்பரையைப் பெருக்கினார்.

ஆசார்யனிடம் உபதேசமாகப்பெறும் மூன்றுமந்த்ரங்கள் திருமந்த்ரம் (அஷ்டாக்ஷரம்), த்வயம், சரமச்லோகம் என்பவை. இவற்றுக்கு கூரத்தாழ்வானே முதல் முதலில் வியாக்கியானமருளிச் செய்ததாகச் சொல்லப்படுகிறது. இந்த வியாக்கியானம் நமக்குக்கிடைக்காமல் மறைந்துவிட்டது. ஸ்ரீபராசரபட்டர் அருளிச்செய்த "அஷ்டச்லோகீ" என்னும் க்ரந்தமே ரஹஸ்யவ்யாக்யானமாக நமக்குக்கிடைத்துள்ள முதல் க்ரந்தம். இதன் எட்டு சுலோகங்களில் முதல் நாலு திருமந்த்ர வ்யாக்யானமாகவும், அடுத்த இரண்டு த்வயத்தை விளக்குவதாகவும்,, கடைசி இரண்டு சரமச்லோகார்த்தமாகவும் அமைந்தவை. இந்த க்ரந்தத்தில் பொதிந்துள்ள அர்த்தங்களை கீர்த்திமூர்த்தி மஹாவித்வான் ஸ்ரீஉ..வே. காரப்பங்காடு வேங்கடாசார்யஸ்வாமி 10 உபன்யாஸங்களாக திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்தஸாரதிஸ்வாமி ஸன்னிதியில் (நவம்பர் 1968) ஸாதித்தபோது எடுத்த குறிப்புகளை ஆதாரமாகக் கொண்டு இந்தக் கட்டுரைகள் எழுதப்படுகின்றன. இந்த க்ரந்தத்திற்கு ப்ரதிவாதிபயங்கரம் அண்ணா அருளிய ஸம்ஸ்க்ருதவ்யாக்யான மொன்றே ப்ரஸித்தமாகத் தெரிகிறது. வேறு உண்டாயின் கண்டு கொள்வது.

ஐந்நூறு ஸர்க்கம் கொண்ட ஸ்ரீராமாயணத்துக்கு சோகம் ச்லோகமாகவவதரித்த "மாநிஷாத....." ச்லோகம் ஸங்க்ரஹமாக அமைந்துள்ளது. ஸ்ரீநிவாஸ! உனக்குப்பல்லாண்டு! ராவணமந்தோதரியான

இரட்டையில் ராவணனைக் கொன்று லோகத்துக்கு க்ஷேமத்தை விளைவித்த உனக்குப்பல்லாண்டு" என்று ஒரு பொருள் சொல்லக்கூடியது இந்த ச்லோகம். இது போல் ஓம் என்னும் ப்ரணவம் ஸகலசாஸ்த்ர ஸாரமாகும், ரஹஸ்யத்ரயங்கள் ஒன்றையொன்று விவரிப்பதாக உள்ளன. அவற்றின் ஸாரம் ப்ரணவம்.

எல்லா சாஸ்த்ரங்களும் ஐந்து முக்கியமான அர்த்தங்களையே தெரிவிக்கின்றன என்று நமது ஆசாரியர்கள் நிர்வஹிக்கின்றனர். ஆத்மக்ஷேமத்தை விரும்புபவன் எவனும் இவற்றை அவசியமாக அறியவேணும். ஸர்வேச்வரன் இறைவன்-ஸர்வஸ்வாமி. ஜீவாத்மாக்களான நாம் அவனுடைய ஸொத்து; அவனையடைந்து அநுபவ கைங்கர்யம் பண்ணுவதே புருஷார்த்தம் ; அவனையடைய அப்பெருமானே உபாயம்; இதற்குத்தடையாய் நிற்கும் விரோதி வினைப்பயனான அறிவுக்குறை (அவித்யா)- இவற்றை அவனே போக்கித்தரவேணும். இப்படி இறைநிலை, உயிர்நிலை, தக்கநெறி, தடையான ஊழ்வினை, வாழ்வு என்ற 5 அர்த்தங்களையே எல்லா சாஸ்த்ரங்களும் நமக்குத் தெரிவிக்கின்றன. இவைகளை உள்ளபடி அறியாவிடில் ஆத்மக்ஷேமமே கிடையாது.

நமது சரித்திரமோவெனில், நான் மனிதன்; பாஞ்சபௌதிகமான இந்த உடலே உயிராக (ஆத்மா) உள்ளது; நமக்குவேண்டியது அந்நபாநாதிகள். உலகில் இன்புற்றிருக்க பொருள் (தனம்) ஸாதனமாகும் என்ற அறிவுக்குச் சேர அமைந்துள்ளது. "அஹம் நாராயணதாஸ:-அடியேன் எம்பெருமானுக்கு அடியவன்" என்று உணர்வதே ஞானம். "நண்ணியும் நண்ணகில்லேன் நடுவேயோருடம்பிலிட்டு" என்று அவனையடைய பெருந்தடையாய் நிற்பது கர்மமடியாகப் பெற்றுள்ள இவ்வுடல். இதனுடன் ஸம்பந்தம் வருவது நமது பாபபலனால். இதைக்கழித்துத் தர அவனால் தான் இயலும்.

மிகுந்த சாஸ்த்ர ஜ்ஞானம் படைத்தவன் ஹநுமான். பெருமாளே இளையபெருமாளிடம் இவனறிவை வியந்து கொண்டாடுகிறார். ஆனால் இவர் உண்மையறிவு பெற்றது லங்கையில் பிராட்டி ராவணனுக்குப் பண்ணிய உபதேசத்தைக் கேட்ட போதுதான். ராவணனுக்கு அந்த நல்லுரை பலனளிக்கவில்லை. இவர் உண்மையறிவு பெற்றார். "ஸீதாமாச்ரித்ய தேஜஸ்வீ" என்று வால்மீகி முநிவர் இவரைக் கொண்டாடுகிறார். தன்னைப்பிராட்டியிடம் முதலில் "தூதோராமஸ்ய" என்று ராமதூதனாகச் சொல்லிக் கொண்டவர், பின்னர் அரக்கர்களிடம் தன்னை "தாஸோஹம் கோஸலேந்த்ரஸ்ய" - ராமதாசன் என்று தெரிவித்துக் கொள்ளுகிறார், இதற்குப் பலன்-பெருமாளிடம் திரும்பிச் சென்றபோது பரமபதத்தில் பெறும் பரிஷ்வங்கம்-தன் திருமேனியையே தரும்படியான அணைப்பு- திருவடிக்குப்

பரிசாகக் கிடைத்தது. "திருமாலே! நானுமுனக்குப்பழவடியேன்" என்ற பாசுரத்தால் பெரியாழ்வார் இவ்வர்த்தத்தைக் காட்டித் தருகிறார்.

வேதாந்தங்களில் காட்டப்பட்ட சிறந்த அர்த்தம் "ஜகத்காரணனானவனே மிகவுயர்ந்தவன்-பரம்பொருள்; அவனையே உபாஸித்து மோக்ஷம் பெறவேணும்" என்பதே. இந்தக் காரணவஸ்து யார், எப்படிப்பட்டது என்பதில் மதபேதம் உள்ளது. ஜகத்காரணம் விஷ்ணுவே என்பது எம்பெருமானார் தரிசனத்தில் ஸித்தாந்தம். ஸ்ரீவிஷ்ணுபுராணத்தின் முதலில் பராசர மஹரிஷியை அணுகி மைத்ரேயர் ஒரு பொதுவான கேள்வியைக் கேட்கிறார் "யந்மயஞ்ச ஜகத்ஸர்வம்?" என்று. இதற்குப் பராசரபகவான் தரும் பதில் "விஷ்ணோஸ்ஸகாசாதுத்பூதம்" என்று. விஷ்ணுவே ஜகத்ஸ்ருஷ்டிலயங்களுக்கு ஏக காரணம் என்பது பராசரர் வ்யாஸர் போன்ற பரமவைதிகர்களின் ஸித்தாந்தம். இதை ஒப்புக்கொள்ளாதவன் வைதிகனல்லன். ஸ்ரீவிஷ்ணு புராணம் புராணரத்நம் என்று கொண்டாடப்படுவது. உயர்ந்த ப்ரமாணக்ரந்தங்களில் எல்லாவற்றிலுமே முதலில் ஒரு பொதுவான கேள்வி பார்க்கப்படுகிறது. ஒரு குறிப்பிட்ட வ்யக்தியைப் பற்றி கேட்பதில்லை. சில நலன்களைச் சொல்லி, "யார் இப்படிப்பட்ட நலன்களையுடையவன்?" என்று கேள்வி பார்க்கப்படும். ஸ்ரீராமாயணத்தின் ஆரம்பத்தில் "கோந்வஸ்மிந்ஸாம்ப்ரதம் லோகே குணவாந் கச்சவீர்யவாந்?" என்று கேள்வி. "இக்ஷ்வாகுவம்சப்ரபவ: ராம:" என்று ராமனைக்குறிப்பிட்ட பதில். தர்மபுத்ரர் பீஷ்மரை "கோதர்மஸ்ஸர்வதர்மாநாம் பவத: பரமோ மத:?" என்று கேட்க, பிதாமஹர், "ஏஷமே ஸர்வதர்மணாம் தர்மோ அதிகதமோ மத:" என்று கண்ணனைக்காட்டி, அவனுடைய திருநாமங்களில் ஒரு ஆயிரத்தைத் தொகுத்து அவற்றால் அவனுடைய பெருமைகளை வெளியிடுகிறார். இது மஹாபாரத்தில் ஒரு ஸாரமான அத்யாயம். இப்படிப் பொதுவில் கேள்வியும் விசேஷத்தில் பதிலும் அமைந்தால் அதுவே ப்ரமாண லக்ஷணமாகும்.

அஷ்டச்லோகியில் முதல் ச்லோகம் ஸகலவேதஸாரமான ப்ரணவத்தை விவரிப்பது. த்ரயீஸார:- ருக் யஜுஸ் ஸாமம் என்று கொண்டாடப்படும் மூன்று வேதங்களின் ஸாரமாயுள்ளது இது. இது த்ரயாத்மா - இ, உ, ம என்ற மூன்று எழுத்துக்களை ஆத்மா (ஸ்வரூபமாக) வாகக் கொண்டது. அகாரத்தின் பொருள் "ஜகதுதயரக்ஷாப்ரலயக்ருத் விஷ்ணு:" என்றருளுகிறார். இதன் விரிவை மேலே காண்போம்.

## அஷ்டச்லோகீ - 1

திருமந்த்ரம் - ப்ரணவார்த்தம்

ஸ்ரீ பராசரபட்டர் அருளிச்செய்துள்ள இந்த க்ரந்தத்தின் முதல் ச்லோகம்:

அகாரார்த்தோ விஷ்ணு: ஜகதுதயரக்ஷாப்ரளயக்ருத்

மகாரார்த்தோ ஜீவஸ்ததுபகரணம் வைஷ்ணவமிதம் |

உகாரோநந்யார்ஹம் நியமயதி ஸம்பந்தமநயோ:

த்ரயீஸாரஸ்த்ரயாத்மா ப்ரணவ இமமர்த்தம் ஸமதிசத் || 1

உலகங்களுடைய ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயம் (உண்டாதல், காத்தல், அழித்தல்) இவைகளைச் செய்கிற விஷ்ணு (எங்குமுள்ளவர்) ப்ரணவத்தில் அ என்ற எழுத்திற்குப் பொருளாக விருக்கிறார். ஸகல ஜீவர்களும் ம என்ற அக்ஷகரத்துக்குப் பொருளாவர். வைஷ்ணவமான இந்த ஜீவாத்மா அவன் உபயோகிக்கத்தக்கதாக (அவனுக்கு சேஷமாக-ஸொத்தாக) உள்ளது. உ என்னுமெழுத்து ஜீவாத்மா பரமாத்மா இருவருக்குமிடையேவுள்ள (சேஷ-சேஷி ஸ்வாமி-ஸொத்து) அநந்யார்ஹமான (வேறு ஒருவருக்கும் தகாத) உறவை நியமிக்கிறது (வலியுறுத்துகிறது). மூன்று வேதங்களின் ஸாரமாகவும் மூன்று ஆக்ஷரங்களால் (அ,உ,ம) ஆனதுமான ப்ரணவம் (ஓம்) இவ்வர்த்தங்களை நன்றாகப் பேசிற்று (காட்டித்தருகிறது).

திருமந்த்ரம் மூன்று பதங்களாலானது. முதலில் ஓம் எனும் ப்ரணவம்;இது ஸகல வேதஸாரஸங்க்ரஹமாகும். இதை த்ரயீஸார: என்பது காட்டுகிறது. ப்ரணவம் மூன்றக்ஷகரங்களுடைய சேர்க்கை. இதனால் த்ரயாத்மா எனப்பட்டது. இந்த அக்ஷரங்கள் அ, உ, ம என்பவை. திருமந்த்ரத்தின் நமோ நாராயணாய என்ற பகுதி (மந்த்ர சேஷம்) ப்ரணவத்தின் விவரணமாகும். அகாரம் நாராயணபதத்தினாலும், உகாரம் நம: பதத்தினாலும் மகாரம் நாராயணா-வில் நாரதபத்தினாலும் விவரிக்கப்படுகின்றன. திருமந்த்ரத்தின் விவரணம் அநுஸந்தானத்துக்கேற்ற மந்த்ரமான த்வயம். உபாய உபேயங்களைத் தெளிவாகத் தெரிவிக்கும் த்வயத்தின் விவரணம் ஸ்ரீகீதாசரமச்லோகம். எம்பெருமானைப்பற்றுமிடத்து ப்ராபகாந்தரபரித்யாகம் (மற்ற உபாயங்களைக்கழிக்கை) அவச்யமென்றும், அநிஷ்டநிவ்ருத்தி (ஸர்வபாபங்களையும் போக்குதல்) இஷ்டப்ராப்திகளை (வேண்டியவற்றைப் பெறுதல்) அவனே செய்துதருகிறான் என்பதை விவரிக்கிறது. ஆக இவையெல்லாவற்றுக்கும் ஸங்க்ரஹம் ப்ரணவம், ப்ரணவார்த்தத்தை முதல் ச்லேகத்தில் விவரித்தருளுகிறார், ஸ்ரீபாசரபட்டர்.

அகாரார்த்தம் விஷ்ணு. விஷ்ணுவே ஜகத்காரணவஸ்து. உலகங்களை ஸ்ருஷ்டித்தல், காத்தல், அழித்தல் மூன்று செயல்களையும்

நிர்வஹிப்பவனே காரணவஸ்துவாவான். 'விஷ்ணோஸ்ஸகாசாதுத்பூதம்' என்ற ஸ்ரீவிஷ்ணுபுராணவசனம் இதற்கு ஒரு ப்ரமாணமாகும். "அஹம் க்ருஸ்நஸ்ய ஜகத: ப்ரபவ: ப்ரலயஸ்ததா" (எல்லா உலகங்களையும் உண்டாக்குமவனும் அழிப்பவனும் நானே கீதை, 7-6), என்கிறான் கண்ணன். இவன் ஸாக்ஷாத்விஷ்ணுவினவதாரம் என்பதில் விவாதமேதுமில்லை.

விஷ்ணு ; வாஸுதேவன், நாராயணன் என்ற திருநாமங்கள் வ்யாப்தியை (எங்கும் நிறைந்திருப்பதை) சொல்லுமவை. விஷ்ணு வாஸுதேவன், நாராயணன், புருஷோத்தமன், அநந்தன் எல்லாம் ஒரே தெய்வத்தைக் குறிக்கும் பெயர்கள். இச்சொற்களெல்லாம் யோகரூடம். பங்கஜம் என்னும் சொல் சேற்றில் உண்டானது என்று பொருள்படும். ஆனால் பங்கஜம் என்ற பெயர் தாமரை ஒன்றையே குறிப்பதாகக் கொள்ளப்பட்டுள்ளது. சேற்றிலே உண்டாகக்கூடிய மற்ற எந்த புஷ்பத்தையும் பங்கஜம் என்ற பெயரால் அழைப்பதில்லை. பங்கஜம் என்ற பெயர் யோகரூடம் எனப்படும். வ்யாப்தியுள்ளவன் விஷ்ணு (இது யோக வசநம்). ஆனால் இந்தப் பெயர் நாராயணன் எனப்பட்ட ஒரு தேவதையைத்தான் குறிக்கும். வேறு ஒருவருக்கும் விஷ்ணு என்ற பெயர் பொருந்தாது. சிவம் என்றால் மங்களம் என்று பொருள். ஸர்வ மங்கள ஸ்வரூபனான நாராயணனை பரமசிவம் என்றழைக்கலாம். ஆனால் சிவனை எக்காரணங்கொண்டும் நாராயணன் என்றோ விஷ்ணு என்றோ அழைக்கக்கூடாது.

"அ-இதி பகவதோ நாராயணஸ்ய ப்ரதமாபிதாநம்" என்கிறது யாவருக்கும் பொதுவான பதஞ்சலி முனிவரின் மஹாபாஷ்யம் என்னும் நூல். அ என்று ஆரம்பிக்கும் எதுவும் மங்களமானது. 'அக்ஷராணாம் அகாரோஸ்மி' (கீதை 10-33) என்கிறான் பகவான். தமிழ்ப்பெரு நூலான திருக்குறளும் அகரம்-ஆதிபகவன் என்று சொல்வதாக அ வில் ஆரம்பிக்கப்படுகிறது. ஸ்ரீபாஷ்யத்தில் மங்களச்லோகம் "அகிலபுவநஜநமஸ்தேம பங்காதிலீலே" என்று தொடங்கும். ஜகத்காரணத்வம் பேசப்படும் இவ்விடம் அ என்னுமக்ஷரத்தில் தொடங்கப்பட்டது. ஸகல, நிகில, அகில மூன்று சொல்லும் பொருந்துமாயினும் அகில (ஒன்றொழியாமல் எல்லாம்) சப்தத்தினால் மங்களமாகத் தொடங்கப்பட்டது. அகாரம் விஷ்ணுவைத்தான் சொல்லும். விஷ்ணுதான் அகாரத்தின் பொருள் என்று இரண்டுபடியாலும் வலியுறுத்தும்.

ப்ராணவார்த்தத்தைப் பலர் பலபடியாகச் சொல்லுவர். அ -. விஷ்ணு, உ-சிவன், ம-ப்ரஹ்மா (நான்முகன்) மூன்றும் ஒரு பொருளானது ஓம் எனும் ப்ரணவம் என்று கூறுவாருளர். வேதத்துக்கு ஈடாக ஒப்புக் கொள்ளப்பட்ட ஸ்ரீபாஞ்சராத்ரம் அ-நாராயணன் உ-லக்ஷ்மி ம-ஜீவன் திவ்யதம்பதிக்குரியவன்

ஜீவன் என்று பொருள் கூறுகிறது. ஆனால் பட்டர் இங்கு இப்பொருளைச் சொல்லவில்லை. பட்டர் தம்மைப் பிராட்டி பரிகரம் என்று அழுந்தச் சொல்லுமவர்; அதில் பெருமை கொள்ளுமவர். பிராட்டி பரிகரம் எதையும் பகவானால் விடவே முடியாது என்பது பட்டர் காட்டும் வழி. ஆயினும் இங்கு உகாரத்தினால் பட்டர் லக்ஷ்மியைச் சொல்லவில்லை. அவதாரணம் என்று இங்கு பட்டரின் திருவாக்கு. இது ப்ரமாணபுரஸ்ஸரமாக அமைந்துள்ளது. ஸங்க்ரஹமாக முதலில் சொல்லி மேலே விவரிப்பது சாஸ்த்ரலக்ஷணம். வித்வான்களுக்கு அபிமதமான வழியுங்கூட. மிகவும் பயன்தரும் வழியுமாகும்.

அ என்ற எழுத்து பகவான் விஷ்ணுவைக்குறிப்பது. இந்த அ-வின் பேரில் ஆய (பொருட்டு) என்ற உறுபு வேத இலக்கண முறைப்படி ஏறிக்கழிவதாகக் கொள்ளவேணும். ம என்பது ஜீவனைச் சொல்லும் எழுத்து. அ-ஆய-ம. அகாரத்தினால் சொல்லப்பட்ட விஷ்ணுவின் பொருட்டு (விஷ்ணுவினுடையவன்) ம எனும் ஜீவன். அஷ்டாக்ஷரம் வேதமந்த்ரம். "பகவத ஏவ அஹமஸ்மி" என்று ஒரு வேதவாக்யம். இது ப்ரணவத்தை விளக்குகிறது. பகவத (பகவானுடைய) பகவத ஏவ-பகவானுக்கே உரியதாய் உள்ளவன் அஹம்-ஜீவன். அ-பகவான் ம-ஜீவன் (அஹம்). ஆதலால் உ=ஏவ ஏவ என்பதை அவதாரணம் என்பர். ஒரு விஷயத்தை வலியுறுத்துவது. பகவானுக்கே உரியது என்பதால் மற்ற எவருக்கும் உரித்தன்று என்பது வலியுறுத்தப்பட்டதாயிற்று. இதை **அநந்யார்ஹம்** (வேறொருவருக்கு உரித்ததாகாதது) என்பர். மகாரம் ஜீவனைச் சொல்லும் என்று சொல்லி "உ கார: அநயோ: ஸம்பந்தம் அநந்யார்ஹம் நியமயதி" என்கிறது. "மவ்வானவர் அவ்வானவருக்கு சொந்தம்; மற்றொருவருக்குமல்ல" என்று ப்ரணவம் திட்டவட்டமாகக் கூறுகிறது. **அ-ஆய-ஏவ-அகாரத்தினால்** சொல்லப்பட்ட விஷ்ணு எம்பெருமான் ஒருவனுக்கே உரித்ததானவன் மகாரத்தினால் சொல்லப்பட்ட ஜீவன். இங்கு ஏவ என்பதனால் உ என்பதன் பொருள் கொள்ளப்படுகிறது. வேதவாக்யங்களில் பலவிடங்களில் ஏவ என்னும் அர்த்தத்தில் உ என்னும் எழுத்து ப்ரயோகிக்கப்பட்டுள்ளது. **உதாரணம் ஸஉச்ரேயாந்பவதி ஜாயமாந:**- பகவான் ஒருவனே மீண்டும் மீண்டும் பிறப்பதனால் உயர்ந்து ஒளிவிட்டு விளங்குகிறான். (ஜீவர்கள் கர்மமடியாகப் பிறந்து ஒளி இழக்கிறார்கள்). இந்த அநந்யார்ஹஸம்பந்தத்தை நம: பதம் மேலும் வலியுறுத்துகிறது.

ஜீவன் எம்பெருமானுக்கு ஸொந்தம் என்றால் கணவனின் உடைமைகளில் அவன் மனைவிக்கும் உரிமையுண்டு என்கிற நியாயத்தினால் பிராட்டிக்கும் ஸொந்தமானவனாகிறான். ஜீவன் எம்பெருமானுக்கே சேஷப்பட்டவன் என்பதால் அவனுடைய மஹிஷியான பிராட்டிக்கும் சேஷம் என்ற பொருள் தன்னடைவே கிடைக்கிறது. உகாரத்தினால் பிராட்டியைத்

தனியே சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. மேலும் அகாரம் ஜகத்காரணனான-ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் இவைகளை நிர்வஹிக்கும் எம்பெருமான் விஷ்ணுவையே சொல்லுகிறது. எம்பெருமான் நித்யமான லக்ஷ்மீவிசிஷ்டனாகையால் (எப்போதும் லக்ஷ்மிதேவியுடன் சேர்ந்தே இருப்பவன்) எம்பெருமானுக்கு சேஷவஸ்து பிராட்டிக்கும் சேஷம் என்பதும் தானாக கிடைக்கும். இது அர்த்தபலத்தால் கிடைக்கும் பொருள். உதாரணமாக சைந்தவம் என்ற வட சொல்லுக்கு உப்பு என்று பொருள். ஸிந்துதேசத்துக் குதிரை என்றும் பொருளுண்டு. சாப்பாடு சம்பந்தமாகப் பேசும்போது ஸைந்தவம் என்றால் உப்பையே குறிக்கும். போருக்குச் செல்லும் வீரன் ஸைந்தவம் என்றால் குதிரை என்றே பொருள்படும். ஒருவன் "குடத்தில் நீர் கொண்டு வா" என்றால் 'ஓட்டையில்லாத நல்ல குடத்தில் நீர் கொண்டு வா' என்று சொல்லத் தேவையில்லை. அர்த்தபலத்தாலேயே கிடைத்துவிடும். இதுபோல இங்கும் ஜீவன் பிராட்டிக்கு சேஷவஸ்து என்பது அர்த்தபலத்தால் (understood) கிடைக்கும்.

"லக்ஷ்ம்யாஸஹருஷீகேச: தேவ்யாகாருண்ய ரூபயா; ரக்ஷகஸ் ஸர்வ பூதாநாம்" (லோகாநாம்) என்ற ப்ரமாணத்தின்படியும் பிராட்டியில்லாமல் எம்பெருமான் ஜகத்ரக்ஷகனாக இருக்கமுடியாது. லக்ஷ்மீ ஸம்பந்தமில்லாத ரக்ஷகத்வம் அநுபபந்நம் (பொருந்தாது) என்பர். ஆக, அ என்ற எழுத்தினால் (1) காரணனான (ஸ்ருஷ்டி கர்த்தா) எம்பெருமான (2) ரக்ஷகனான எம்பெருமான் (3) ஸம்ஹர்த்தாவான (அழிப்பவன்) எம்பெருமான் என்ற பொருள்கள், மேலும் ரக்ஷகத்தினால் காட்டப்பட்ட லக்ஷ்மீஸம்பந்தமுள்ளவை இவையெல்லாம் காட்டப்படுகின்றன.

மகாரத்தால் சொல்லப்படுபவன் ஜீவன்; மூன்று வகைப்பட்ட ஜீவஸமூகம். தாதுபலத்தினால் மகாரத்தினால் காட்டப்பட்ட ஜீவன் அணு, ஜ்ஞானஸ்வரூபன், ஜ்ஞாநாச்ரயன் (அறிவுக்கிருப்பிடம்-அறிவுடையவன்) என்ற பொருள்கள் கிடைக்கின்றன. இதனால் ஜீவன் ப்ராக்ருதமான அறிவற்ற உடலிலிருந்து வேறுபட்டவன் என்று தெரிகிறது. நாம் அவசியம் அறிந்து கொள்ள வேண்டிய இந்தப் பொருள் அர்த்தபலத்தால் கிடைக்கிறது. கீதையில் "நத்வேவாஹம் ஜாது நாஸம்" என்று(2-11) ஆரம்பித்து இந்த விஷயத்தைப் பரக்கப் பேசியுள்ளான் கண்ணன். எதிரியின் ஆத்மாவை உன்னால் கொல்லப் போகாது. சரீரத்தை நீ கொல்லாமல் விட்டாலும் அது எப்படியும் அழியப் போவதே. இவை வெவ்வேறு என்று அறிவாயாக" என்கிறான்.

**ததுபகரணம் வைஷ்ணவமிதம்**-இது நாராயணாய-வில் ஆயவை விளக்குகிறது. திருமந்த்ரத்தில் ப்ரணவம் சுருக்கிச் சொல்லுமதை மந்த்ரசேஷம் (மந்த்ரத்தின் மீதிபாகம்) விவரிக்கிறது. அதில் அ=நாராயண

நாராயண வின் பேரில் ஆய வ்யக்தம்- ஸ்பஷ்டம்-வெளிப்படை. ப்ரணவத்தில் அ-வின் பேரில் ஆய லுப்தம்.

யானே நீ-நான் என்பது உன்னுடையது-விஷ்ணுவினுடையது. **தத் இதம் உபகரணம் வைஷ்ணவம்.** அந்த (மகாரார்த்மாகச் சொல்லப்பட்ட) இந்த ஜீவன் விஷ்ணுவுக்கு சேஷபூதமானது (சொந்தமானது, அடிமைப்பட்டது). "தாஸபூதாஸ் ஸ்வதஸ்ஸர்வே ஹ்யாத்மந : ப்ரமாத்மந:" என்று ஸ்ம்ருதி வசநம். ஆத்மாக்கள் யாவரும் இயல்பாகவே பரமபுருஷனுக்கு தாஸபூதர்கள். தத்=தஸ்ய: ஆத்மாவினுடைய, **உபகரணம்**-சொத்துக்கள், **வைஷ்ணவம்**-எம்பெருமானுடையது. ஜீவன் 'தன்னது' என்று அறியாமையால் மதித்திருக்கும் எல்லாப் பொருள்களும் எம்பெருமானுக்குச் சேஷப்பட்டவை-சொந்தமானவை. இதுவே உண்மை. ஆகவே, சேதன, அசேதன வஸ்துக்கள் எல்லாமே அவனுடைய உடைமைகளாம்.

உகார:அநயோ: **ஸம்பந்தம் அநந்யார்ஹம் நியமயதி**, உ **என்னுமக்ஷரம்** அ, ம இவர்களின் உறவு **அநந்யார்ஹம்** (பிறர்க்கு உரியதல்ல) என்பதை வலியுறுத்துகிறது. உறவு-சேஷ சேஷி (ஸ்வாமி தாஸ)யான உறவு. உகாரம் ஏவ என்ற பொருளையுடையது. அ-வுக்கே ஆன ம-வேறு ஒருவருக்குமல்ல என்ற பொருள் முன்னமே விளக்கப்பட்டாயிற்று. ஜீவர்களும் இந்த ஜகத்தும் பகவான் நாராயணனுக்கே உரியவை. வேறு எவருக்குமல்ல. முறைப்படி விவாஹமான பெண் தனது கணவனுக்கே உரியவள் என்பது போல இவ்வுறவும். அகார வாச்யன் பகவான் உடையவன். மகாரவாச்யன் (ஜீவன்) உடைமை. உகாரார்த்தம் இவ்வுறவு அநந்யார்ஹம் என்கிறது. மற்றவருக்கு உரிமையின்மை என்பது மிகவும் முக்கிய அர்த்தம். இது **நியமயதி** என்பதனால் கிடைக்கும். பேய்ச்சி கண்ணனுக்கு இட்ட விஷம் "ஸதந்யம் தம் விஷஸம்மிச்ரம் ரஸ்யமாஸீத் ஜகத்குரோ:" என்கிறபடி கண்ணனுக்கு இனித்ததாம். அது கண்ணன் ஒருவனுக்கென்றே-அவனை முடிப்பதற்கென்றே-இட்டு வந்த விஷம். அதைச் சுவைத்து உண்டு பேய்ச்சின் உயிரையும் அத்துடன் உறிஞ்சினான். அநந்யார்ஹம் என்பது ஸ்ரீவைஷ்ணவத்தில் மிகவும் ஸாரமான பொருளாம். பகவத்கீதையில் கண்ணனால் பலமுறை வலியுறுத்தப்பட்டுள்ளது.

**த்ரயீஸார: த்ரயாத்மா ப்ரணவ இமமர்த்தம் ஸமதிசத்**-த்ரயீஸார:-ருக், யஜுஸ், ஸாம மென்கிற மூன்று வேதங்களின் ஸாரம், "அகாரோ விஷ்ணுரித்யுக்தோ மகாரோ ஜீவ வாசக:| தயோஸ்து நித்யஸ்ம்பந்தஉகாரேண ப்ரகீர்த்தித:||" வேதஸாரமான ப்ரணவம் **த்ரயாத்மா**-மூன்று எழுத்துக்களை ரூபமாக உடையது. ஒவ்வொரு எழுத்தும் ஒரு வேதத்தின் ஸாரம். த்ரயாத்மா-மூன்றெழுத்துச் சேர்க்கையான ப்ரணவம்

(ஓம்) இமமர்த்தம்-இந்த முன் விளக்கிய அர்த்தத்தை ஸமதிசத்-நன்றாகச் சொல்லிற்று.

குறிப்பு - எம்பெருமானடியார்களான பாகவதர்கள் எம்பெருமானுக்கு திருவடிஸ்தானத்திலுள்ளவர்கள் நாம் பிராட்டிக்காட்பட்டவர்கள் என்பதுபோல திருமாலடியர்களான பாகவதர்களுக்கும் ஆட்பட்டவர்கள். *உற்றது முன்னடியார்க்கடிமை (திருமொழி ).



## அஷ்டச்லோகீ - 2

திருமந்த்ரம்-நம: பதார்த்தம்

இனி இரண்டாவது, 'மந்த்ரப்ரஹ்மணி' என்ற ச்லோகத்தால் திருமந்த்ரத்தின் மத்யமபதமான நம: விளக்கப்படுகிறது.

மந்த்ரப்ரஹ்மணி மத்யமேந நமஸா பும்ஸ: ஸ்வரூபம் கதி:
கம்யம் சிக்ஷிதமீக்ஷிதேந புரத: பச்சாதபி ஸ்தாநத: |
ஸ்வாதந்த்ர்யம் நிஜரக்ஷணம் ஸமுசிதா வ்ருத்திச்ச நாந்யோசிதா
தஸ்யைவேதி ஹரேர்விவிச்ய கதிதம் ஸ்வஸ்யாபி நார்ஹம் தத: || 2

மநத்ரப்ரஹ்மமான (உயர்ந்தமந்த்ரமான) திருமந்த்ரத்தினுடைய நடுவிலுள்ள நம: பதமானது முன் பதமான ப்ரணவத்தோடு சேர்க்கப்பட்டால் (ஓம் நம: ) ஜீவனுடைய ஸ்வரூபம் (பகவச்சேஷத்வம்) சிக்ஷிக்கப்படுகிறது (தெளிவாகப்படுகிறது). அதிருக்கும் ஸ்தாநத்திலேயே சேர்த்தால் (நமோ நம:) கதி (உபாயம்) தெளிவாக்கப்படுகிறது. பின்னிருக்கும் பதத்தோடு சேர்ந்தால் (நாராயணாய நம:) பெறத்தக்க கம்யம் - (புருஷார்த்தமான கைங்கர்யம்) தெளிவாக்கப்படுகிறது.

சாஸ்த்ரங்களில் ஸர்வஸ்வதந்த்ரனாகச் சொல்லப்பட்ட ஹரிக்கே (பகவானுக்கே) எல்லாமென்று (விவிச்ய) பலவடியாலும் அலசிப்பார்த்து சொல்லப்பட்டது. வேறுவிதமாக (ஆத்மா ஸ்வதந்த்ரன என்று) நினைக்கக்கூடாது. **நிஜரக்ஷணம் ஹரேரேவ** - ஆத்மாவின் ரக்ஷணம் பகவானையே சேர்ந்தது. **ஸமுசிதா வ்ருத்தி:** - சேஷத்வத்துக்குச் சேர ஜீவனின் வ்ருத்தி (நடத்தை-கைங்கர்யம்) ஹரேரேவ. ஆகையால் தான் (நான்) தனக்கும் பகவானுக்கும் என்று பொதுவாகவும் எண்ணக்கூடாது. ஸமுசிதா வ்ருத்தி ஹரேரேவ. கண்ணனுக்கே ஆமதுகாமம்.

இவையெல்லாவற்றையும் நம: பதம் சிக்ஷித்துக் கொடுக்கும். நம: பதத்தினர்த்தம் தெளிவாகக் கைபுகுந்தால் அஹங்காரம் முழுதுமாய் அழிந்து ஆத்மாவின் உண்மை நிலையான பகவச்சேஷத்வம் விளங்கும்.

மந்தாரம் தாரயதி - அநுஸந்திப்பவரை ரக்ஷிப்பது மந்த்ரம். மந்த்ரங்களுள் மிகச் சிறந்தது திருவஷ்டாக்ஷரம் என்பதால் இதை "மந்த்ரப்ரஹ்மா" என்கிறார் பட்டர். "யதா ஸர்வேஷு நாஸ்தி நாராயணாத்பர: ததா ஸர்வேஷு மந்த்ரேஷு நாஸ்தி சாஷ்டாக்ஷராத் பர:" என்று ப்ரமாணம். எல்லா தேவதைகளிலும் நாராயணனிற்காட்டில் உயர்ந்த தேவதை கிடையாதது போலே எல்லா மந்த்ரங்களிலும் வைத்துக்கொண்டு திருவஷ்டாக்ஷரத்திலும் உயர்ந்ததொரு மந்த்ரம் இல்லை. ஸகலபலப்ரதம் இது. இதில் மத்யம (நடு) பதம் நம: என்பது. இதை இரண்டு தடவை

இருப்பதாக வைத்துக் கொள்க. முதலது அகண்ட பதம் (ஒரே பதம்), இரண்டாவது ஸகண்டம் ந, ம என்று இரண்டாக யோசித்துக் கொள்வது. முதலில் ஸகண்ட நமஸ்ஸை ப்ரணவத்துடன் சேர்த்து ஓம் நம: என்றாகும். இதை "புரத: ஈக்ஷிதேந மத்யமேந நமஸா" என்கிறது இந்த ச்லோகம். இதனால் தேறுவது "பும்ஸ: ஸ்வரூபம் சிக்ஷிதம்" என்கிறது. அதாவது "ஓம் நம:" என்பதால் சேதனின் சேஷத்வமான ஸ்வரூபம் சோதிக்கப்படுகிறது - தெளிவாக்கப்படுகிறது. ஸ்வரூபம்-உண்மை நிலை; எம்பெருமானுக்காட் பட்டிருக்கை.

**(1)** ஓம் நம:- ப்ரணவம் ஜீவன் பகவானுக்கே உரியவன் என்று சொல்லுகிறது. இது முதல் ச்லோகத்தில் வலியுறுத்தப்பட்ட அர்த்தம். அ ஆய ஏவ - மகாரத்தால் சொல்லப்பட்ட ஜீவன் அகாரத்தால் சொல்லப்பட்ட பகவானுக்கே உரியவன். நம: (எனக்கு நான் இல்லை) என்பதால் தனக்கில்லை என்பது திடப்படுகிறது. தனக்கில்லை என்று தேறினால் பிறருக்கில்லை என்பது தானே திடப்படும். ஸ்ரீ பட்டரின் திருமஞ்சன ச்லோகத்தில் பகவான் 'த்வம் மே' என்ன, ஜீவன் 'அஹம் மே' என்பதாக வருகிறது. அஹம்மே-நான் என்னுடையவன் என்பது அநாதி காலமாக ஊறிய எண்ணம். இங்கு நம: என்று ஸ்வார்த்ததையை (தனக்காக விருப்பைக்) கழிக்கிறது. "கிம் தேந நக்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா?" என்று ஸ்ம்ருதி வசனம். நான் எனது என்பவன் பகவானின் சொத்தான ஆத்மாவை அபஹரிக்கும் பெரிய திருடன். இந்தத் திருட்டுக்கு மேலானதொரு பாபமேயில்லை.

"வ்யக்தமேஷ மஹாயோகீ பரமாத்மா ஸநாதந:" (ஸ்ரீரா-யுத்-114-14) என்ற மந்தோதரீ வசநத்தில், (இந்த ஸ்ரீராமன் யோகியர் தலைவன் ; பரம்பொருள்; எப்போதுமுள்ளவன்; இது தெளிவு) ஏஷ: என்பதற்கு வியாக்யானமளிக்கும் பெரியவாச்சான்பிள்ளை, தர்மபாலனான இவர் ரிஷிகளுக்கு தர்மத்தையும், 'ராஜ்யகாங்க்ஷீ விபீஷண:' என்னப்பட்ட விபீஷணனுக்கு ஐச்வர்யத்தையும், 'பஜஸ்வ காமம் ஸுக்ரீவ' என்கிறபடி ஸுக்ரீவனுக்குக் காமத்தையும், «கச்சலோகாந் அநுத்தமாந்», என்றும், 'ஆவஹத்பரமாம் கதிம்' என்றும் ஜடாயுவுக்கும் வாலிக்கும் மோக்ஷத்தையும், தந்த மஹாபுருஷர் இவர். அறம், பொருள், இன்பம், வீடு என்ற நாலு புருஷார்த்தமும் ஆனவாறே எனக்குக் கைவல்யத்தைத் தந்த இவர் - என்று அருளிச் செய்கிறார். ஸகலபலப்ரதன் விஷ்ணு. கைவல்யமென்பது பகவதநுபவத்தை விலக்கி தன்னைத்தானே அநுபவிப்பது. கைவல்யத்தைக் கணவனையிழந்த வைதவ்ய நிலைக்கு ஒப்பிட்டுச் சொல்லுகிறாள். பரமபுருஷன் ஒருவனே புருஷன் - நாயகன். எல்லா ஜீவர்களும் ஸ்த்ரீப்ராயர்கள்-நாயகிகள். நாயனையொழியத் தானே தன்னைப்

பார்த்துக் கொண்டிருப்பது கைவல்யம் வைதவ்யநிலையையொத்ததே. "நஹிமேஜீவிதேநார்த்த : விநாராமம் மஹாரதம்" என்று பிராட்டி வார்த்தை, ஆழ்வாரும், «ஏராளும் இறையோனும் திருவாய்மொழியில், எம்பெருமான் கவராத உயிரினால் குறைவிலனே» உடம்பினால் குறைவிலனே; என்று தமது உடம்பும் உயிரும் அவனுக்குப் பயன்படாத போது இருந்தென்ன? அழிந்தென்ன? (அழிந்துதான் போகட்டுமே) என்கிறார். பகவானொருவனுக்கே உரியது ஜீவன்; தனக்குமில்லை; பிறருக்குமில்லை; என்பது வலியுறுத்தப்படுகிறது. "மந்த்ரம் மாதா; ஆசார்ய: பிதா" என்பர். தாயார் மகளைக் கணவனுடன் அனுப்பும்போது, "கணவனுக்காகவே நீயாகவேணும் அவன் மனம் மகிழும்படி நடந்துகொள் "என்று சிக்ஷிப்பது போலவே இங்கும்.

**(2)** **ஸ்தாநத: ஈக்ஷிதேந மத்யமேந நமஸா பும்ஸ:கதி:சிக்ஷிதா.** நம :என்ற மத்யமபதத்துடன் - அதிருக்கும் ஸ்தானம் மத்யமஸ்தாநம்: நம: என்பதைச் சேர்த்தால் «நமோ நம:» என்றாகும். இதனால் கதி: உபாயம் சிக்ஷிக்கப்படுகிறது (தெளிவாக்கப்படுகிறது). நமோ நம:- ரக்ஷணோபாயம் என்னதன்று; பகவானுடையதே. அகண்ட நமஸ் உபாயவாசி-உபாயத்தைச் சொல்லுமது. த்ரௌபதியுடன் சேர்ந்த பாண்டவர்கள் "நமச்சக்ருர்ஜநார்த்தநம்" என்கிறபடி கண்ணனை சரணம் பற்றினர் - என்கிறது பாரதம். சரணம்பற்றுதலை நமஸ்காரத்தினால் சொல்லப்பட்டது. "ஸம்ஸார ஸாகரம் கோரம் அநந்தக்லேசபாஜநம் த்வமேவ சரணம் ப்ராப்யநிஸ்தரந்தி மநீஷிந:" என்று ஜிதந்தே ஸ்த்தோத்ரம். மிகவும் கொடிய ஸம்ஸாரமான பிறவிக்கடலை உன்னையே சரணமடைந்து மனிதர்கள் கடக்கிறார்கள்-என்கிறது. ஆக நமஸ்ஸினால் சரணவரணம் சொல்லிற்றாயிற்று.

மனைவியைக் காக்கும் பொறுப்பு கணவனுக்கே உள்ளதொன்று. இதனால் கணவன் பர்த்தா எனப்படுகிறான். விவாக ஸமயத்தில் பாணிக்ரஹணம்-பெண் கையைப்பிடித்து கொள்வது-"உன்னை உயிருள்ளவரை நான் காப்பாற்றுகிறேன்" என்று உறுதிபண்ணிக் கொடுக்கையாகும். பெண் தன்னைத் தானே ரக்ஷித்துக் கொள்ளும் சக்தியைப் பெற்றிருந்தாலும் அதைப் பயன்படுத்தக்கூடாது. உலகங்களுக்கெல்லாம் ஈச்வரியான ஜகதீச்வரிஸீதா பிராட்டி, தன்னுடைய தேஜஸ்ஸால் ராவணனை எறித்திருக்க முடியும். ஆனால், அப்படிச் செய்யவில்லை. அவனையும் உபதேசத்தால் திருத்த முயன்றாள். "பிராட்டி ஸ்வசக்தியை விட்டாள்" என்பர் நமதாசாரியர்கள். "என்னைப் பெருமாள் வந்து லங்கையையும் ராக்ஷஸர்களையும் அழித்து அழைத்துப் போவரேல் அதுவே அவருக்குப் பொருந்தும்." என்று பிராட்டி திருவாக்கு. திருவடியுடன் ராமஸன்னிதி செல்ல அவள் விரும்பவில்லை. "பிறரால்

ரக்ஷணம் வேண்டாம். அவனேரக்ஷகன்." என்ற அத்யவஸாயம் அவசியம். "ரக்ஷண உபாயம் எம்பெருமானது; என்னதல்ல" என்று ஸ்தாநத: நமஸா சிக்ஷிக்கப்படுகிறது. உன்னாலல்லால் யாவராலும் குறை வேண்டேன்.

**(3) பச்சாத் ஈக்ஷிதேந மத்யமேந நமஸா பும்ஸ: கம்யம் சிக்ஷிதம்** பின்பதமான நாராயணாய என்பதுடன் நமஸ்ஸை சேர்ந்தால் "நாராயணாய நம:" என்றாகும். இதனால் கம்யம்-ப்ராப்யம்-கைங்கர்யம்; 'அஹம் ஸர்வம் கரிஷ்யாமி' என்று பெருமாளையும் பிராட்டியையும் பின் தொடர்ந்த இளையபெருமாளின் நிலையிது. இப்படி கைங்கர்யம் பண்ணுவதால் வருமாநந்தம் எம்பெருமானுடையதே நம:- என்னதன்று. "உனக்கே நாமாட் செய்வோம்; மற்றை நங்காமங்கள் மாற்று" என்ற பாசுரம் இதையே சொல்லுகிறது. அவனுடைய ஆநந்தமே முக்யம்; எனக்கு ஒன்றும் வேண்டாம். ஏதோ சைதந்யார்த்தமாக அவன் மகிழ்வதைக் கண்டு மகிழலாம்; "படியாக்கிடந்துன் பவளவாய் காண்பேனே." படிபோலக் கிடப்பது ஒரு கைங்கர்யம்; இதனால் மகிழும் அவனது பவள வாயைக்காண்பது சைதன்யகார்யம்; அவன் மகிழ்ச்சியைக் அதிகப்படுத்தும். நீ உகக்கு நல்லவரோடு உழிதராயே-நாங்கள் வியக்க இன்புறுதும் ("வேய்மருதோளிணை திருவாய்மொழி), "நீ உனக்கு விருப்பமுள்ளயாருடனாவது கூடிக்களிப்பாயாக; அதுகண்டு நாம் மிகவும் இன்புறுவோம்; எம்மோடு நீ கூடவில்லையே என்று குறைப்படமாட்டோம்" என்கிறாள் இடைமகளான நாயகி இங்கு. அவன் ஆநந்தப்படும்படி கைங்கர்யம் பண்ணவேண்டும். அதனால் வரும் மகிழ்ச்சி நம்மதன்று. "ப்ரஹர்ஷயிஷ்யாமி"- எப்போது உம்மை மகிழ்விக்கப் போகிறேன்? என்று பரமாசாரியரான ஆளவந்தார் பாரிக்கிறார். இதுவே புருஷார்த்த சோதநம். கைங்கர்யமே புருஷார்த்தம்; அதனால் ஆக வேணும் மகிழ்பவன் அவனே ஆக வேணும். நம:.

இந்த ச்லோகத்தின் முன்பாதி சிக்ஷிக்கும் விதத்தைச் சொல்லிற்று. மேல்பாதி சிக்ஷையின் ப்ரயோஜனத்தை விவரிக்கிறது.

ஸ்வாதந்த்ர்யம் நிஜரக்ஷணம், ஸமுசிதாவ்ருத்தி என்று மூன்று விஷயங்கள் இங்கு பேசப்படுகின்றன. இவை ~தஸ்யைவேதிஹரே: ஸ்வஸ்யாபிநார்ஹம்∆ என்று "எம்பெருமானுக்கே;நமக்கல்ல" என்று தெளிவுபடுத்துகிறது. நம: பதத்தினர்த்தம் கை புகுந்தால் அஹங்காரம் நசிக்கும். *நீர் நுமதென்றிவை வேர் முதல் மாய்த்து இறை சேர்மின் என்று திருவாய் மொழி (1-2-2)

1 ஸ்வாதந்த்ர்யம் தஸ்ய ஹரேரேவ இதி விவிச்ய கதிதம் அந்யோசிதம் ந- என்ற சேர்த்துக் கொள்வது. ஸ்வாதந்த்ர்யம் தஸ்ய ஹரேரேவ-ஸ்வதந்த்ரமாகச் செயல்படுவது சாஸ்த்ரங்களில் ஸ்வதந்த்ரனாக ;ப்ரஸித்தியுடைய எம்பெருமானுக்கே என்று ஆராய்ந்து சொல்லப்பட்டது. வேறொருவருக்கும் தக்கதன்று. இதேபோல "தஸ்ய ஹரேரேவ...". என்பதை நிஜரக்ஷணம், ஸமுசிதா வ்ருத்தி இவற்றுடன கூட்டி அந்வயம். தனதிச்சைப்படி ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி (செயல்படுகைஇ படாமை) ஸ்வாதந்த்ர்யம். அதாவது ஸ்வேச்சாதீநமாக செயல்படுபவன் ஸ்வதந்த்ரன்; பரேச்சாதீநமாக (பிறர் இச்சைப்படி) செயல்படுபவன் பரதந்தரன். பகவான் ஒருவன் தான் உண்மையில் ஸ்வதந்த்ரன். பகவத்பாரந்த்ர்யம் ஜீவனின் ஸ்வரூபமடியாக வந்தது (இயல்பு). ஸம்ஸாரி தசையில் கர்மமடியாக பிறருக்கு பரதந்த்ரனாயிருக்கலாம். அரசன், தந்தை, யஜமானன் இப்படி பலருக்கும் பரதந்த்ரனாயிருக்க வேண்டியுள்ளது கர்மபாரதந்த்ர்யமாகும். ஸம்ஸாரி சேதனனுக்கு உண்மையான ஸ்வாதந்த்ர்யமே கிடையாது. எல்லா சேதனர்களுக்கும் ஆத்மா உள்ள தனையும் பகவத்பாரதந்த்ர்யம் இயல்பாக உண்டு.

"ஸோக்ஷர : பரம ஸ்வராட்" ; "தமீச்வராணாம் பரமம் மஹேச்வரம் தம் தேவதாநாம் பரமம் ச தைவதம்" முதலிய ச்ருதி வாக்யங்கள் எம்பெமான் ஸர்வஸ்வாமி-அதனால் நிரங்குச ஸ்வதந்த்ரன் என்று காட்டித்தருகின்றன *அயர்வறுமமரர்கள் அதிபதி என்று வேதாந்தத்தில் சொல்லப்பட்டது "தஸ்யஹரேரேவ ஸ்வாதந்த்ர்யம்". நாராயணன் ஒருவனுக்கே ஸ்வாதந்த்ர்யம் இயல்பாக உள்ளது. இது **விவிச்யகதிதம்** - அலசிப்பார்த்து முடிவு செய்யப்பட்ட உண்மை. அந்யோசிதம் ந-வேறு விதமாக உள்ளதாக (ஆத்மாவுக்கு ஸ்வாததந்த்ர்யம் உள்ளதாக) நினைக்க இடமில்லை.

நாம் விரும்பினாலோ-அதற்கேற்ப செயல்பட்டாலோ விருப்பம் கைகூடுமென்பதில்லை. விரும்பாமலிருக்கும் போதும் பல நன்மைகள் ஏற்படுகின்றன, இவை வினைப்பயனாக ஏற்படுபவைகளாம். ~ஸ்வேச்சாதீ ப்ரவ்ருத்தி நிவ்ருத்திக:∆ என்பது பகவான் ஹரி ஒருவனுக்கே பொருந்தும் பகவான் ஸ்த்யகாமன்,(விருப்பமில்லாம்ல் கைகூட பெற்றவன்

ஸத்யஸங்கல்பன் (மனதில் நினைத்ததை செயல்படுத்த வல்லவன்) ஜீவனுக்கு எப்போதும் எந்த நிலையிலும் ஸ்வாதந்த்ர்யம் கிடையாது.

சரீரத்துக்குத் தானாக செயல்படு மாற்றல் கிடையாது என்பது தெளிவு ஆத்மாவுக்கு ஸ்வாதந்த்ர்யம் உள்ளது போலத் தோற்றுகிறது. "தன்கையே தனக்குதவி" என்பது சரீரம் நல்ல நிலையில் உள்ளபோது தான். வ்யாதி, முதுமை இவற்றால் சரீரம் நிலை குலைந்தால் எதற்கும் பிறருதவியை எதிர்ப்பாக்கவேண்டியுள்ளது. இருந்தாலும் ஸாமான்யமாக சரீரம் ஆத்மா இட்டவழக்கு என்னலாம், பகவச் சரீரமான ஜீவன் அவனிட்ட வழக்காயிருக்கும். *உடன்மிசையுயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்- என்கிறபடி பகவான் எல்லாவற்றிலும்(சேதநா சேதநம்) உயிராக வியாபித்து ஈச்வரனாக விருந்து நடத்துகிறான்.

மஎன்னுமக்ஷரம் ஜீவவாசி. ஞானமாகவும் ஞானத்துக் கிருப்பிடமாகவுமுள்ளவன் ஜீவன். இப்படிப்பட்டவன் ஸ்வதத்ரனெனத் தோற்றும், ப்ரணவத்தில் அ ஆய ம என்று இவன் பரமாத்மாவுக்கு சேஷவஸ்து என்று தேறிற்று. *திருமாலே! நானுமுனக்குப்பழவடியேன் என்று ஆழ்வார் காட்டித்தருகிறார். சேஷத்வத்தின் எல்லைநிலம் பாரதந்த்ர்யம் பகவத்பாரதந்த்ர்யமே ஆத்மாவின் இயல்பான நிலை. ஆக, ஸ்வதந்த்ரன் பரதந்த்ரன் என்று இரண்டு ஆகாரங்களும் ஜீவனுக்கு உண்டோவெனில், முன்னது நிச்சயமாக இல்லை. நம:- நான் எனக்கு அல்லேன்; பாரதந்த்ர்யமே ஸ்வரூபம் என்றதாயிற்று. பகவதிச்சைப்படி கார்யங்கொள்ளப்படுமிவன் அதற்குப்பாங்காக இருக்கத்தக்கவன்.

ஜீவன் ஞானமுள்ளவனாகையால் ஒரு விஷயத்தைப்பார்த்தால் விரும்பத்தக்கதாயின் அதை அடைய முயன்று அடைந்து அநுபவிக்கிறான். இதனால் ஜீவனின் ஸ்வாதந்த்ர்யம் வெளியாவது போலுள்ளது. ஆனால் சாஸ்த்ரங்களில் பாரதந்த்ரயமே சொல்லப்பட்டது. மகாரவாச்யனான ஜீவன் அகாரவாச்யனான பகவானுக்கே என்று ப்ரணவம் சொல்வதை, நம: என்று மத்யமபதம் இவ்விஷயத்தில் தீர்மானம் பண்ணுகிறது. ஜீவனுக்கு உண்மையில் ஸ்வாதந்த்ரயமில்லை என்றே தீர்மானமாகிறது. மகாரத்தில் தோற்றும் ஸ்வாதந்த்ர்யம் பகவத்பாரதந்த்ர்யத்துக்கு அநுகுணமாகப் பொருந்தியிருக்க வேண்டும்.

"நின் செம்மா பாதற்பு என் தலை சேர்" (பாதபற்பு = திருவடித்தாமரை) என்று ஆழ்வார் எம்பெருமானை வேண்டுகிறார், "இப்பேறு பெற உன்னிடம் என்ன கைம்முதல் உளது?" என்று பகவான் கேட்க ஆழ்வார், "நோற்றநோன்பிலேன்... என்னான் செய்கேன்? உன்னாலல்லால் யாவராலும் ஒன்றும் குறைவேண்டேன், நான் செய்வதென்று ஒன்று உளதோ?

கொல்லாமாக்கோல் கொலைசெய்து பாரதப் போர் எல்லாச்சேனையும் இருநிலத் தவித்த எந்தாய்! - கொல்லும் பரிகரமல்லாத (குதிரைகளை நடத்தும்) கோலாலேயே எல்லாச் சேனைகளையும் கொன்று அர்ஜுனன் கொன்றதாக வெற்றியை அவனதாக்கினாய். உன்னால் செய்ய முடியாததொன்றுண்டோ? நான் நீயிட்ட வழக்கயிருக்க, நான் செய்வது என்று என்ன உள்ளது?" என்று கேட்கிறார் ஆழ்வார். ஸ்வாதந்தர்யம் ஹரேரேவ - வேறு விதத்திலில்லை.

**2. நிஜரக்ஷணம் ஹரேரேவ** - சரீரத்தைப் பேணுவது - ரக்ஷிப்பது ஆத்மாவின் காரியமாகப் பார்க்கப்படுகிறது. பகவச் சரீரம் ஜீவன். ஆகையால் ஜீவரக்ஷணம் பகவானுடையது. ஸ்வாதந்தர்யமில்லாமல் ரக்ஷணமிருக்க முடியாது. பகவானொருவனுக்கே உண்மையில் ஸ்வாதந்தர்யமுண்டு என்று தேறிவிட்டதால் அவனே ஸர்வரக்ஷகன் என்று தெரிகிறது. நிஜரக்ஷணம் ஹரேரேவ. "அபயம் ஸர்வபூதேப்யோ ததாமி ஏதத் வ்ரதம் மம" என்று நமது ரக்ஷணத்தில் வ்ரதம் பூண்டவன் பகவான். "யாரையும் விடாமல் ரக்ஷிக்கும்படி ஸங்கல்பமுடையவன் நான்" என்று (ஸுக்ரீவமஹாராஜரிடம சக்கரவர்த்தி திருமகன் சொன்னது) ஜீவரக்ஷணத்தில் தீக்ஷைபூண்டவன். "ஹரிர்ஹரதி பாபாநி" என்று சாஸ்த்ர வசனம். ஆச்ரிதருடைய பாபத்தைப் போக்கி ரக்ஷிப்பவன் விஷ்ணு ஒருவனே.

லக்ஷ்ம்யாஸஹ ஹ்ருஷீகேசோ தேவ்யா காருண்யரூபயா |

ரக்ஷகஸ் ஸர்வஸித்தாந்தே வேதாந்தேஷு ச கீயதே ||

என்ற ஸ்ரீபாஞ்சராத்ர வசனப்படி திருமால் ஒருவனே ரக்ஷகனாக முடியும். பிரம்மன், சிவன் முதலான சிறு தெய்வங்களைப் போல இவன் ரக்ஷணத்தில் நழுவமாட்டான். இதனால் **அச்யுதன்** எனப்படுகிறான். அவன் ரக்ஷணத்தினின்றும் நாம் நழுவாமல் (அவனை விலக்காமல்) இருக்க வேண்டும். நிஜரக்ஷணம் ஹரேரேவ-அந்யோசிதம் ந-ஸர்வரக்ஷகன் ஹரி ஒருவனே ; வேறு விதத்திலில்லை.

**3 ஸமுசிதா வ்ருத்தி ஹரேரேவ** - சேஷத்வத்துக்கு அநுரூபமான (தக்கதான) வ்ருத்தி. "கேசவ நம்பியைக் கால் பிடிப்பாள் எனும் இப்பேறு- என்கிறபடி கணவனுக்கு அடிமை செய்வது மனைவிக்கு அநுரூபமான வ்ருத்தி. ஒருவன் மனைவி மாற்றானுக்குக் கால்பிடிப்பது அநுசிதா வ்ருத்தியாம். "த்வத்பாத பங்கஜ பரிக்ரஹ தந்யஜந்மா பூயாஸம்" - தாமரையையொத்த உன் மெல்லடிகளைப் பிடித்து பிறவிப் பயன் பெறுவேனாக - என்று நாயகன் நாயகியிடம் சொல்வதாக மாலதீமாதவ நாடக வசனத்தைக் கேட்ட ஆளவந்தார், "சந்தை அழகிது; அப்ராப்த விஷயத்திலாயிற்றே" என்றருளினாராம்.

பகவத்ஸந்நிதியிலே அவனுக்கே அடிமை (கைங்கர்யம்) பண்ணப் பிறந்தவன் ஜீவன். "உனக்கே நாமாட் செய்வோம்" என்று ஆண்டாளின் ப்ராத்த்தனை. இதுவே பகவத்சேஷத்வமான ஆத்மஸ்வருபத்துக்குப் பொருந்தியது. இந்த ஸமுசிதா வ்ருத்தி ஸர்வ ஸ்வாமியான நாராயணனிடத்தில் செய்யப்பட வேணும். வேறு எவ்விடத்திலும் செய்யத்தக்கதன்று. அப்படி செய்வது பகவத்சேஷத்வத்துக்குச் சேராது.

ஸர்வேஷுதேசகாலேஷு ஸர்வாவஸ்தாஸு சச்யுத |

கிங்கரோஸ்மி ஹ்ருஷீகேச! பூயோ பூயோஸ்மி கிங்கர: ||

என்று ஜிதந்தா ஸ்தோத்ரத்தில் ஸ்வரூபமறிந்த ச்வேதத்வீபவாவஸிகளின் பாசுரம்.

"எல்லாவிடங்களிலும் எப்போதும் எல்லாநிலைகளிலும் தேவரீருக்கு அடியேன் ஆட்செய்பவன். மேலும் மேலும் ஆட்செய்பவனேயாகிறேன்."

கேசவ என்ற திருநாமத்துக்கு இடத்துக்குத் தக்கபடி பொருள் கூறுவர். அழகான கேசபாசங்களை-திருக்குழல்களை-உடையவன் ; கேசி என்ற அரக்கனை ஸம்ஹரித்தவன் ; க என்ற பிரமனையும் ஈச என்ற சிவனையும் உண்டாக்கியவன் (ஸர்வ ஸ்ரஷ்டா - ஸர்வஸ்வாமி) என்றிப்படி பொருள்கள். இதுபோல ஹரேரேவ என்பதற்கு இந்த சுலோகத்தில் மூன்றிடங்களில் மூன்று அர்த்தம் (1) ஸ்வதந்தரனான ஹரி (2) ரக்ஷகனான ஹரி (3) அடிமைகொள்ளும் ஹரி. ஹரி - எல்லாவற்றையும் தனதாக்கிக் கொள்பவன் என்று பொருள். எல்லாம் அவனதே. இதைப் பிறர் இல்லை செய்யப் புகுந்தால் தனது ஸொத்தைத் தன்னதாக்கிக்கொள்ள அவதாரங்களைச் செய்கிறான் பகவான். இப்படி தன்னதாக்கிக் கொள்பவன் (ஹரதி இதி ஹரி:) ஹரி. *கூடாரை செல்லும் சீர் கோவிந்தன் என்கிறபடி தனது குணத்துக்கும் செயலுக்கும் தோற்றுக் கூடாதவரை வீரத்துக்கு இலாக்காக்கி தண்டித்துத் தன்னதாக்கிக் கொள்கிறான். வாமனாவதாரத்தில் படி பிக்ஷை கேட்பதற்கும் தயங்குவதில்லை. இதெல்லாம் இந்த உலகில்தான்; - விண்ணாட்டில் யாவரும் ஸ்வரூபமுணர்ந்தவர். இங்கேதான் அவன் 'த்வம்மே' என்றால் இவன் 'அஹம்மே' என்று எதிர் நிற்பது காணப்படுவதால் தன்னதாக்கிக் கொள்ள அவதாரம் (விபவம், அர்ச்சை என்றிப்படி) பண்ண வேண்டியுள்ளது. ஸர்வ ஸ்வாமியாய் எல்லாம் தன்வசம் உள்ளவனிடத்தான் ஸ்வாதந்த்ர்யம் பொருந்தும். மற்ற எவரிடமும் பொருந்தாது.

"ஹரிர் ஹரதி பாபாநி" என்கிறபடி ஹரி என்று அவன் பெயரைச் சொன்னால் நமது பாபங்களை அவன் எடுத்துக் கொண்டு நம்மை ரக்ஷிக்கிறான். துஷ்டர்கள் சொன்னாலும் இதேபலனுண்டு. நெருப்பு யாரையும் சுடுமன்றோ? பாபம் போனால் ரக்ஷணம் தானே ஸித்திக்கும்.

ஹரி ஸர்வஸ்வாமி. ஸர்வசேஷி. சேஷித்வத்தை நிரூபகமாகவுடையவன். சேஷிஸன்னதியில் சேஷவ்ருத்தி போகரூபமாய்-இன்பமாய்-இருக்கும். சேஷித்வப்ரஸித்தி ஹரி ஒருவனுக்கே உள்ளதொன்று. வ்யக்த சதுர்த்தி «ஆய» (நாராயணாய என்று வெளிப்படையானது) கைங்கர்யப்ரார்த்தனையையே சொல்லுகிறது.

இப்படிமேலே சொன்ன ஸ்வாதந்த்ர்யம், நிஜரக்ஷணம், ஸமுசிதாவ்ருத்தி மூன்றும் ஹரேரேவ-பகவானுக்கே உரியவை. அந்யோசிதம் ந-வேறு எவரிடத்திலும் பொருந்தாது. ஸ்வஸ்யாபி நார்ஹம்-தனக்கும் பகவானுக்கும் பொதுவாக உள்ளவை என்றும் எண்ணலாகாது. ஸ்வாதந்த்ர்யம், ரக்ஷணம், ஆநந்தம் இவை தனக்கு உண்டு என்று ஜீவன் எண்ணக்கூடாது. இவற்றை நம:பதம் சிக்ஷித்துக் கொடுக்கும். "த்வ்யக்ஷரஸ்து பவேந்ம்ருத்யு: த்ரயக்ஷரம் ப்ரஹ்மண: பதம்" என்று மஹாபாரத வசனம். மம (எனது) என்ற இரண்டு அக்ஷரம் நாசம்பிளைவிக்கும், ந மம (என்னதில்லை) என்ற மூன்று அக்ஷரங்கள் பேற்றையளிக்கவல்லன.

சிக்ஷணத்தின் பயன், ஆத்மாவின் மூன்று ஆகாரங்கள் (நிலையான அடையாளங்கள்) அநந்யார்ஹசேஷத்வம், அநந்யசரணத்வம், அநந்யபோக்யத்வம் என்று காட்டப்பட்டதாயிற்று. நம: பதத்தினர்த்தம் உள்ளபடி நெஞ்சில்பட்டு அதன்படி சரித்திரமும் அமைந்தால் அஹங்காரம் பூர்ணமாக நசித்துப்போகும். பகவதங்கீகாரமும் நிச்சயமாகும்.



ஸ்ரீ கோதண்டராமர் – வடுவூர்

## அஷ்டச்லோகீ - 3

**திருமந்த்ரம்-நாராயணாய-விவரணம்**

முதலிரண்டு சுலோகங்களினால் திருவஷ்டாக்ஷரத்தின் முதலிரண்டு பதங்களான ப்ரணவ நமஸ்ஸுக்களின் பொருள்களை விளக்கிவிட்டு, மூன்றாம் சுலோகத்தினால் மூன்றாவது பதமான "நாராயணாய" வின் பொருளை விவரித்தருளுகிறார்.

**அகாரார்த்தாயைவ ஸ்வமஹமத மஹ்யம் ந நிவஹா:**
**நராணாம் நித்யாநாமயநமிதி நாராயணபதம் |**
**யமாஹாஸ்மை காலம் ஸகலமபி ஸர்வத்ர ஸகலா**
**ஸ்வவஸ்தாஸ்வாவி: ஸ்யுர்மம ஸஹஜகைங்கர்யவிதய: || 3**

நான் அகாரார்த்தமான பரமாத்மாவுக்கே ஆட்பட்டவன் (சேஷவஸ்து); ஆனபின்பு நான் எனக்கன்று (சேஷப்பட்டவனன்று). அழிவற்றவைகளான நித்யவஸ்துக்களின் கூட்டங்களுக்கு ஆதாரமாயும், நரர்களென்று நித்யர்களான ஜீவர்களுக்கு ப்ராப்யப்ராபகமாகவும், 'நித்யர்களான நரர்கள் எவனுக்கு (பரமாத்மாவுக்கு) ஆதாரமோ' (சரீரமோ) என்று எந்த பகவானை நாராயணபதம் சொல்லுமோ அந்த பகவான் பொருட்டு எல்லாக் காலங்களிலும், எல்லா தேசங்களிலும், எல்லா அவஸ்தைகளிலும் (நிலைகளிலும்) எனக்கு இயல்பான கைங்கர்ய அநுஷ்டானங்கள் தடையின்றி உண்டாகக்கடவன.

*பெயர்களாயிரத்தாய்! என்றும் *தேவோநாமஸஹஸ்ரவாந்! என்றும் சொல்லுகிறபடி பகவான் பலபல பெயர்களையுடையவன். இப்படி எண்ணிறந்தபெயர்களில் நாராயண நாமம் மிகவுயர்ந்தது. திருநாமங்களை வ்யாபகம், அவ்யாபகம் என்று இரு வகுப்பாகச் சொல்லுவர், *எங்குமுளன் கண்ணன் என்னும்படி வ்யாப்தியைச் சொல்பவை நாராயண, வாஸுதேவ, விஷ்ணு என்ற மூன்று நாமங்கள். அவ்யாபகங்கள் குணசேஷ்டிதங்கள் முதலியவைகளையிட்டு வந்த திருநாமங்கள். வ்யாபகத் திருநாமங்கள் அவ்யாபக நாமங்களைவிடச் சிறந்தவை. வியாபக நாமங்கள். மூன்றிலும் நாராயண சப்தம் அர்த்தபூர்த்தியாலே உயர்ந்தது. சிஷ்டபரிக்ரஹத்தாலே உயர்ந்தது.

"நாராயண" என்ற பதம் ~நாராணாம் அயந: ய: ஸ: என்றும் (தத்புருஷஸமாஸப்படி), ~ நாரா: அயந: யஸ்ய ஸ: என்றும் (பஹுவ்ரீ ஸமாஸப்படி) இரண்டு விதமாகப் பொருள் தரவல்லது. முதலதுக்கு (தத்புருஷன்) நாரங்களுக்கு ஆச்ரயம் (அயநம்-இருப்பிடம்) என்று பொருள். இரண்டாமதுக்கு (பஹுவ்ரீ) நாரங்களை ஆச்ரயமாகவுடையவன் என்று

பொருள். 'ர' என்பது அழியும் தன்மையைக் குறிக்கும். ந-ர-என்பதனால் அழிவின்மை சொல்லப்பட்டது.'-நராணாம் நித்யாநாம் நிவஹா:' என்பதனால் அழியுந்தன்மையற்ற எப்போதுமுள்ள வஸ்துக்களின் கூட்டங்கள் (திரள், ஸமூஹம்) சொல்லப்பட்டது. இப்படிப்பட்ட கூட்டங்களை நாரா: என்பர். "நாரங்களாவன நித்யவஸ்துக்களினுடைய திரள்" என்று முமுக்ஷுப்படி (96). : "இதில் 'நித்ய' என்கையாலே நார சப்தார்த்தமும், அவற்றினுடைய 'திரள்' என்கையாலே பஹுவசநார்த்தமும் (நாரா:என்னும் பன்மை) சொல்லப்பட்டதிறே" என்று இதற்கு மணவாளமாமுனிகள் வியாக்கியானம்.

இப்படிப்பட்ட நித்யவஸ்துக்களின் கூட்டங்களில் பகவான் புகுந்து வியாபித்திருக்கிறான். பாலினுள் வெண்ணெய் போல் கரந்தெங்கும் பரந்துளன். தன்னையொழிய உலகத்தில் எல்லாவற்றிலும் பகவான் புகுந்து நிறைந்து இருக்கிறான். இது பஹுவ்ரீயின் அர்த்தம். *உடன்மிசையுயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்- என்றருளுகிறார் ஆழ்வார். மஹத் எனப்பட்ட மிகப் பெரியபொருள்களிலும் அணு எனப்பட்ட மிகச்சிறிய பொருள்களிலும் ஒவ்வொன்றிலும் பகவான் நிறைந்திருக்கிறான். இப்படி எல்லாப் பொருள்களிலும் பூரணமாக நிறைந்திருப்பதை 'பரிஸமாப்யவ்ருத்தி' என்பர், இதை ஒரு உதாரணம் கொண்டு விளக்குவோம். கண்ணன் தான்சிறைவிடுத்த 16108 ராஜகுமாரிகளை மணந்தான். அவர்களைத் தனித்தனி அரண்மனைகளில் குடிவைத்து, ஒவ்வொருத்தியும் கண்ணன் நாள் முழுதும் தன்னொருத்தியுடன் தான் இருக்கிறான் என்று நம்பும்படி 16108 மாளிகைகளிலும் குடும்பம் நடத்தினான். இதை நாரதர் ஒவ்வொரு திருமாளிகையிலும் புகுந்து ப்ரத்யக்ஷமாகக் கண்டதாகப் புராண வரலாறு. இது போலவே பகவான் உலகிலுள்ள ஸமஸ்தவஸ்துக்களிலும் அதில் பூரணமாக எழுந்தருளியிருக்கிறான். *பரந்ததண்பரவையுள் நீர்தொறும் பரந்துளன்-பரந்த அண்டமிதென;-பெரிதான ஸமுத்ரத்தில் ஒவ்வொரு நீர்த்துளியிலும், ஒவ்வொன்றும் ஒரு அண்டமோ என்னும்படி நெருக்கமில்லாமல் நிறைந்திருக்கிறான் பகவான். "பரா அஸ்ய சக்தி: விவிதைவ ச்ருயதே" என்று ச்ருதி கூறுகிறது. அவனுடைய விவரிக்க இயலாத தனி ஸாமர்த்யம் இது.

"உடன்மிசையுயிரென" என்பது விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தின் ப்ரதான ப்ரதிதந்த்ரார்த்தம். அசித்தான உடலில் சித்தான ஜீவன் புகுந்து நடத்துவதுபோல சித்தான ஜீவனிலும் அவன் அந்தராத்மாவாக இருந்து "அது உள்ளது" என்றாக்கி அதை நடத்துகிறான். சரீரத்தில் உயிருந்தால்தானே அது "உள்ளது"? அன்றேல் அது இயங்காது செத்து விடுகிறதன்றோ? இப்படி அவன் எல்லாவற்றிலும் அந்தராத்மாவாக உள்ளமையால் எல்லாமே அவனாகிறான். எந்த சொல்லும் அவனைச்

சொல்லும். "அநந்தவீர்ய அமிதவிக்ரமஸ்த்வம்-ஸர்வம் ஸமாப்நோஷி ததோஸி ஸர்வ:" (கீதை, 11-40) என்று அர்ஜுனன் ப்ரத்யக்ஷீகரித்துச் சொன்ன வார்த்தை. "அளவற்ற வீர்யபராக்ரமமுள்ள தேவரீர் (அவன் சக்தியைச் சொல்லுகிறது) எல்லாவற்றிலும் வியாபித்துள்ளமையால் எல்லாம் தேவரீரே (நீரே) ஆகிறீர்". *உடன்மிசையுயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன் பகவான். இப்படி எல்லாப் பொருள்களிலும் நிறம்பியிருத்தல் நாராயண சப்தத்தின் ஒரு அர்த்தமாகும்.

நித்யவஸ்துக்களாவன:- ஜ்ஞானாநந்தமலத்வாதிகளான ஸ்வரூப நிரூபக தர்மங்கள்; ஜ்ஞானசக்த்யாதி கல்யாணகுணங்கள்; திருமேனி, அதன் அழகு முதலிய குணங்கள், திவ்யபூஷணங்கள், திவ்யாயுதங்கள், பெரியபிராட்டியார் தொடக்கமான நாச்சிமார்கள், நித்யஸூரிகள், கைங்கர்யங்களைச் செய்யும் வாயில்காப்பார்கள் முதலானோர்கள், முக்தாத்மாக்கள், அப்ராக்ருத பஞ்சபூதமயமான (பஞ்சோபநிஷண்மயமான) பரமபதம், [இதுவரை நித்யவிபூதி தத்வங்கள்;], பத்தஜீவர்கள், காலம், ப்ரக்ருதியின் பலமாறுபாடுகள் அண்டத்துக்குட்பட்ட தேவ மநுஷ்ய திர்யக் ஸ்தாவரங்கள். (இவை லீலாவிபூதி)

ப்ரக்ருதியின் மாறுபாடுகள்-மஹத் முதல் மண் முதலானவை வரையிலுள்ளவை. இவற்றாலான எண்ணிறந்த அண்டங்கள். அந்தந்த அண்டங்களிலுள்ள தேவ மநுஷ்ய திர்யக் (விலங்கு) ஸ்தாவர (செடி, கொடி, மரம்)ங்களாகிற ஜீவராசிகள். நித்ய விபூதியிலுள்ளவைகளும், ஸம்ஸாரமண்டலத்தில் (லீலாவிபூதியில்) ஜீவர்கள், காலம் இவைகளும் தன்னடையே நித்யங்கள் (ஸ்வரூபதோ நித்யம்). மேலே சொன்னவைகளை «ப்ரவாஹதோ நித்யம்» என்பர். உதாரணமாக மனிதன் பிறப்பதுமாக இறப்பதுமாக இருந்தாலும் மனித சமூகம் இருந்துகொண்டே இருப்பதைக்கொண்டு «ப்ரவாஹதோ நித்யம்» என்கிறது. நராணாம் நித்யாநாம் நிவஹா: அயநம் யஸ்ய ஸ: நாராயண: என்று இதுவரையில் சொன்ன பஹுவ்ரீஹியின் அந்வயம். நாரா : அயநம் ஆதாரோ - யஸ்ய ஸ: நாராயண: என்னலாம்.

"அந்த: ப்ரவிஷ்ட சாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா" என்றும், "அந்தர்பஹிச்ச தத்ஸர்வம் வ்யாப்ய நாராரண: ஸ்தித:" என்றும் ச்ருதி கோஷிக்கிறது. "உட்புகுந்து எல்லா விடங்களிலும் ஆத்மாவாக இருந்து நியமித்து நடத்துமவன்" என்றும், "நாராயணன் எல்லா வற்றிலும் உள்ளும் புறமும் வியாபித்து நிற்கிறான்" என்றும் பொருள். "ஈச்வரஸ்ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேசே அர்ஜுந! திஷ்டதி, பராமயந் ஸர்வபூதாநி யந்த்ராரூடாநிமாயயா" (கீதை 18-61). அர்ஜுந! ஸர்வேச்வரன் (பகவான்) எல்லா ஜீவராசிகளின் இதயத்திலும் இருந்து கொண்டு

பரக்ருதியானமாயையால் இயந்திரங்களான உடலில் கட்டுண்ட ஜீவர்களை ஆட்டி வைக்கிறான். "ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதிஸந்நிவஷ்டோமத்த: ஸ்ம்ருதிர்ஜ்ஞாநமபோஹநஞ்ச" (15-15) - எல்லா ஜீவராசிகளின் இதயங்களிலும் நிலை பெற்றவனாயிருப்பவன் நான்; அவற்றின் அறிவு, ஞாபகம், மறதி எல்லாம் என்னதீனமாயுள்ளன. இப்படி பலபல ப்ரமாணங்களுண்டு. அயநம் என்றால் ஆச்ரயம், இருப்பிடம் என்று பொருள். இப்படி எல்லா ஜீவரிலும் அவற்றின் சரீரங்களிலும் அவற்றின் தோஷம் தட்டாமல் வியாபித்துள்ளது பகவானின் ஸௌலப் யத்தை (எளிமையை) ப்ரகாசப்படுத்துகிறது.

நராணாம் நித்யாநாம் நிவஹாநாம் அயநம் ய: ஸ:நாராயண: என்று: தத்புருஷனின் அந்வயம். நித்யவஸ்துக்கள் (முன் சொன்னவை) எல்லாவற்றுக்கும் ஆதாரமாய் இருந்து அவற்றை தரிப்பவன் நாராயணன். இதனால் தேறுவது ஒப்பற்ற உயர்த்தி - பரத்வம்.

இப்படி தத்புருஷ பஹுவ்ரீயுமாகிற இரண்டு ஸமாஸங்களினாலும் கிடைப்பது ஸகலசேதனாசேதனங்களிலும் அந்தராத்மாவாயிருத்தலும், அயநபதத்தின் அர்த்தமான ப்ராப்ய ப்ராபகத்வங்களும். வ்யாபிக்குமிடத்தில் பகவான் குணங்களோடும வ்யாபிக்கிறானாகையால் வ்யாப்தி சொல்லும் போது நித்யவஸ்துக்களின் திரள்களில் உசிதப்படி குணங்களைக் கொள்ளலாகாது. அப்படியே அயந சப்தார்த்தத்தை உபாய (ப்ராபகம், ஆறு), உபேய (ப்ராப்யம், பேறு) ங்களாகக் கொள்ளும் போது நாரசப்தம் ஜீவவாசியாக மட்டும் யோசிக்கப்படவேணும். ஆழ்வாரும் நாராயண சப்தார்த்தங்களை முதல் திருவாய் மொழியில் அருளிச்செய்தார். "கரந்தெங்கும் பரந்துளன்" என்று வ்யாப்தியையும் "உயர்வரவுயர்நல முடையவன்- அயர்வறுமமரர் களதிபதி" என்று ப்ராப்யத்வத்தையும் 'அருளினன்' என்று ப்ராபகத்வத்தையும், "தொழுதெழு" என்கையாலே (மேலே சொல்லப்போகும் புருஷார்த்தமான) கைங்கர்யத்தையும் சொல்லிற்று. "எண்பெருக்கந்நலத்து-வண்புகழ் நாரணன்" என்று மேலே இரண்டாந்திருவாய் மொழியில் திருநாமத்தைச் (சப்தத்தைச் சொல்லி), மூன்றாந்திருவாய் மொழியில் "மலர்மகள் விரும்பும்" என்பதனால் ஸ்ரீ ஸம்பந்தத்தையும் அருளிச் செய்துள்ளார்.

மேலே ≈ஆவிஸ்யு: மம ஸஹஜகைங்கர்ய விதய:∆ என்று கைங்கர்யப்ரார்த்தனையாலே புருஷார்த்தம் சொல்லப்படுகிறது. இது "நாராயணாய" என்ற பதத்தில் சதுர்த்தி ஆய-(4-ம் வேற்றுமையின்) அர்த்தம். ப்ரணவத்தில் 'அ-ஆய'என்று மறையும் சதுர்த்தியை லுப்தசதுர்த்தி என்றும் நாராயணாய-வில் வெளிப்படையான சதுர்த்தியை வ்யக்தசதுர்த்தி என்றும் சொல்லுவார்கள். இனி சொல்லப்போவது வ்யக்த சதுர்த்தியினர்த்தம்.

பரமாத்மா, அவன் விக்ரஹம் (திருமேனி), திவ்யாத்ம குணங்கள் (ஞானசக்தியாதிகள்) யாவற்றையும் மோக்ஷதசையில் ஜீவன் ஸாக்ஷாத்கரித்து அநுபவிக்கிறான். "ரஸோவை ஸ:" பரமபுருஷன் ரஸமான பொருள். "எனக்குத்தேனே பாலே கன்னலே அமுதே-என்கிறார் ஆழ்வார். 'ரஸம்யேவாயம் லப்த்வாநந்தீபவதி' என்றும் "பரமேவ்யோமந் ஸோச்நுதே ஸர்வாந்காமாந்ஸஹப்ரஹ்மணா விபச்சித:" என்றும் ச்ருதி. பகவானாகிற ரஸத்தைப் பெற்று அநுபவித்து ஆநந்திக்கிறானாம் ஜீவன். பரமபதமாகிற திவ்யஸ்தானத்தில் ஜீவன் பேறறிவாளனான பரமபுருஷனுடன் குணாநுபவம் பண்ணிக்களிக்கிறான். "ஸதாபச்யந்தி ஸூரய:" என்பதால் எம்பெருமானின் திருமேனியை இடைவிடாமல் பார்த்தநுபவிப்பததைச் சொல்லுகிறது. இப்படிப்பட்ட அநுபவம் பகவானிடம் ப்ரீதியை உண்டாக்கி வளர்க்கிறது. ப்ரீதியானது கைங்கர்யம் பண்ணத்தூண்டுகிறது. " அநுபவஜநிதப்ரீகாரித கைங்கர்யம்" என்பதன் பொருள் இதுவே. *ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்யவேண்டும் நாம் என்று ஆழ்வார் பாரிக்கிறார்.

யமாஹ=யம் நாராயணமாஹ; அஸ்மை=ஆய; அதாவது, நாராயணாய=நாராயணனின் பொருட்டு, "ஸகலம் காலம், ஸர்வத்ர, ஸகலாஸு அவஸ்தாஸு - ஆவிஸ்யு; மம கைங்கர்யவிதய:" என்று அந்வயம், ஸகலம் காலம்-எல்லாக்காலத்திலும், ஒழிவில்காலமெல்லாம். ஸர்வத்ர-எல்லாவிடங்களிலும் ஸர்வாஸு அவஸ்தாஸு-எல்லா நிலைகளிலும்-நின்றவாறும், இருந்தவாறும் கிடந்தவாறும் நடந்தவாறும்; அந்த: புரத்திலும், வீற்றிருந்தே. ழுலகும் தனிக்கோல் செலுத்தும் ஸபையிலும்; மம=பகவத்விஷயத்தில் ஆத்மாவின் தர்மத்தை உள்ளபடி உணர்ந்த அடியேனுக்கு; ஸஹஜகைங்கர்யவிதய: ஆவிஸ்யு:- இயல்பான (ஸ்வரூபத்துக்குச்சேர்ந்ததான) எல்லா கைங்கர்யங்களும் உண்டாகட்டும். இது ப்ராத்ததனாரூபமாக அமைந்தது. இதுவே யாசித்துப்பெறும் புருஷார்த்தம்.

எஜமானனுக்கு வேலையாள் தன்னைத்தாழவிட்டு அவன் ஏவின கார்யத்தைச் செய்வது துக்கரூபமாயன்றோ இருக்கும்? இது பேறு எனப்பட்ட புருஷார்த்தமாகுமா? என்னில்; ஏவினதைச் செய்கை எல்லாவிடங்களிலும் துக்க ரூபமாயிராது. அன்புள்ள இடத்தில் அடிமை செய்வது போக ரூபமாயிருக்கும். தந்தை, தாய், மனைவி, மக்கள் இவர்களுக்கு வேண்டியதைச் செய்வதில் ஒருவனுக்கு மகிழ்ச்சி உண்டாகிறதல்லவா? புருஷோத்தமனான பரமபுருஷனிடத்தில் அநுபவத்தால் ப்ரீதி உண்டாவதும் அந்தப்ப்ரீதியினால் தூண்டப்பெற்று அவன் முகமலர்த்திக்காக கைங்கர்யம் பண்ணுவதும் ஸஹஜகைங்கர்யமாம். இயல்பாக வருவது. இன்பம் பயப்பது. துக்கம் கலசாதது.

ஸ்ரீபாஷ்யவிவரணமான ச்ருதப்ரகாசிகையில் பலநிர்ணயம் பண்ணுகையில் உதாரணம் காட்டப்படுகிறது : மலையிலிருந்து திருப்பணிக்காகக் கல்லைக் கொண்டுவரும்போது பாதை செப்பனிடுதல், வண்டியில் ஏற்றுதல் என்று பலபடியான யத்நம்-முயற்சி-வேண்டும். அணைகட்டி நீரைத்தேக்கிவைத்த இடத்தில் மதகைத் திறந்துவிட்டால் (தடையை நீக்கினால்) நீர்தன்னடையே பாயும். நீர்பாய்ச்சவென்று தனியாக யத்னம் வேண்டாம். அணை-மதகு ஸ்தானத்தில் தடையாக நிற்பது சரீரம்-உடல்; *நண்ணியும் நண்ணகில்லேன் நடுவேயேபருடம்பிலிட்டு-என்று திருவாய்மொழி. அணையான தடை சரீரம்; பகவானின் குணம், விக்ரஹம் இவை ப்ரவாஹம். அழுக்குடம்பு (பாபம் நிறைந்தது) அதனால் வரும் பொய்நின்ற ஞானமும் (அவித்யை-அறியாமை) விலகினால் அநுபவகைங்கர்யங்கள் தன்னடைவே ஸித்திக்கும். பூமியினின்றும் எடுத்தவைரத்தை சரணையிலிட்டால் ஒளிவீசுகிறது. பூமியைத் தோண்டினால் ஊற்றுநீர் புறப்படுகிறது. ஒளியையும் நீரையும் உண்டாக்கவேண்டாம். ஏற்கெனவே இருப்பவை அவை. ப்ரதிபந்தகம் (தடை) அகன்றால் இருப்பவை வெளிப்படும். ஸஹஜ கைங்கர்யம்-ஆத்மாவின் ஸ்வரூபமாய்க்கூடவே இருப்பது. இது தடை விலங்கி "ஆவிஸ்யு:-அவிர்பவிக்குமாக" என்று வேண்டுகிறபடி. ஸர்வாவஸ்தோசிதாசேஷசேஷதைகரதிஸ்தவ. பவேயம் புண்டரீகாக்ஷ ! த்வமேவைவம் குருஷ்வமாம்" என்று புராணப்ரக்ரியையில் ஸ்ரீரங்ககத்யத்தில் ஸ்வாமி வேண்டுகிறார். ப்ரணவத்தில் சேஷத்வமும், நமஸ்ஸில் பாரதந்த்ர்யமும், நாராணணய-வில் கைங்கர்யமும் சொல்லிற்றாயிற்று.



ஸ்ரீ ராங்கநாச்சியார் ஸமேத ஸ்ரீ ராங்கநாதர் - ஸ்ரீரங்கம்

# அஷ்டச்லோகீ - 4

## திருமந்திரம் - முழுநோக்கு

அஷ்டச்லோகீயின் முதல் மூன்று ச்லோகங்களால் ஸ்ரீபராசரபட்டர் ப்ரணவம், நமஸ், நாராயணாய இவைகளின் பொருள்களை விவரித்தருளினார். இந்த நாலாவது சுலோகத்திலும் திருமந்திரத்தின் பொருளையே வேறு விதமாக வலியுறுத்துகிறார். நமக்கு ஆபத்தான குழிகளையும் அவற்றில் விழுந்து அநர்த்தப்படாமல் திருமந்திரத்தின் ஒவ்வொரு பதத்தினர்த்தமும் எப்படிக் காப்பாற்றும் என்பதை அருளுகிறார். அதாவது அர்த்தநுஸந்தானம் மிகவும் முக்கியம் என்பதை வலியுறுத்துகிறார்.

தேஹாஸக்தாத்மபுத்திர்யதி பவதி பதம் ஸாது வித்யாத்த்ருதீயம்

ஸ்வாதந்த்ர்யாந்தோ யதிஸ்யாத் ப்ரதமமிதரசேஷத்வதீச்சேத்த்விதீயம் |

ஆத்மத்ராணோந்முகச்சேந்நம இதி ச பதம் பாந்தவாபாஸலோல:

சப்தம் நாராயணாக்யம் விஷயசபலதீச்சேச் சதுர்த்தீ ப்ரபந்ந : || 4

ப்ரபந்நனானவன் தேஹத்தில் ஆத்மபுத்திபண்ணுபவனாய்விடில் (ப்ரணவத்தில் ) மூன்றாவதை (மகாரார்த்தத்தை) நன்றாக அறியவேண்டும் (மனதில் ஆராய-சிந்திக்க-வேண்டும்). ஸ்வதந்த்ரன் என்ற புத்தியால் கலக்கமேற்பட்டால் (அந்த:- குருடன்; உட்கண் மறைந்தவன்) (ப்ரணவத்தில்) முதலதை (அகாரார்த்தத்தை) தெளிவாக அறியவேண்டும். இதரசேஷத்வபுத்தி (எம்பெருமான், பிராட்டி, ததீயர்கள் இவர்கள் தவிர்த்து மற்றவரிடம் சேஷத்வபுத்தி) உண்டானால் (ப்ரணவத்தில்) இரண்டாவதை (உகாரார்த்தை) நன்றாக அறியவேணும். தன்னுடைய ஆத்ம ரக்ஷணத்தில் முயற்சியுடையவராயிருப்பின் (ஸ்வரக்ஷணே ஸ்வர்ந்வயம்) நம: பதத்தை நன்றாக ஆராய்ந்து அறியவேணும். அபாஸபந்துக்களிடம் (சரீரமடியாக வரும் உறவினர்) ஆசையுள்ளவரானால் 'நாராயண' என்று ப்ரஸித்தமான (ஸர்வவித நிருபாதிகபந்து நாராயணன்) பதத்தின் அர்த்தத்தை நன்றாயறியவேணும். சப்தாதி விஷயங்களில் சபலனானால் (நாராயணபதத்தின் மேலுள்ள வ்யக்தமான) சதுர்த்தி (ஆய என்ற நான்காம் வேற்றுமை) யின் பொருளை நன்றாய் (விமர்சித்து) அறியவேணும்.

திருமந்த்ரத்தின் பொருளை அறிந்து அதன்படி நடப்பவன் ப்ரபன்னன்-சரணாகதன். 'மந்த்ரம்' என்பது எம்பெருமானுக்கு ஒரு பெயராகும். "மந்திரத்தை மந்திரத்தால் மறவாது என்றும் வாழ் தியேல்" (திருநெடுந்-4) என்றருளினார் ஆழ்வாரும். "ஸர்வேச்வரனை திருமந்திரத்தால் இடைவிடாது அநுஸந்திந்து அநுபவிப்பாயாகில் உனக்கு வாழ்ச்சியாம்" என்கிறார் "மந்தாரம்தாரயதி இதி மந்த்ர:" என்பர்.

அநுஸந்திப்பவனை ரக்ஷிப்பது மந்த்ரம்-என்றபடி. ஆசாரியனிடம் ஸமாச்ரயணம் பெறும் போது அவனிடம் உபதேசமாகப் பெறுவது மந்த்ரம். ஸர்வேச்வரனே ரக்ஷகன். அவனையொழிய வேறொருவரும்-மற்றொன்றும்-ரக்ஷகரல்லர். அப்படியிருக்க மந்த்ரம் எப்படி ரக்ஷகமாகும்? மந்த்ர: என்பதற்கு பகவானையே பொருளாகக் கொண்டால் அவனே ஸர்வரக்ஷகன் என்று தேறிவிடும். மந்த்ரம் என்ற சப்தத்தையும் ரக்ஷகம் என்று ஒரு விதத்தில் கூறலாம். மந்த்ரார்த்தத்தை நினைப்பதால் நினைப்பவனுக்கு அபசரித்ரம் (கெட்ட நடத்தை) உண்டாகமல் தடுத்து ரக்ஷிக்கிறது என்னலாம். ஹிதத்தை (நல்லதைக்) காட்டி பாகவத்விஷயத்தில் ஸச்சரித்ரத்தை (நன்னடத்தையை) ஏற்படுத்தி ரக்ஷிக்கும். 'மந்த்ரோ மாதா' என்பர். தாய் தன் பெண்ணைக் கணவனிடம் எப்படி ஸரியாக நடந்து கொள்ள வேணுமென்று சிக்ஷித்துக் கொடுப்பாளோ அப்படியே இங்கும். *கையுள் நன்முகம் வைக்கும் நையுமென்று அன்னையரும் முனிதிர்* என்று திருவாய்மொழி. அவன் (கட்டிய கணவன்-ஆத்ம விஷயத்தில் எம்பெருமான்) கையில் முகத்தை வைக்கப்ராப்தமாக, உன் கையில் உன் முகத்தை வைத்து துக்கப்படுவது தோஷம். கையில் முகத்தை வைத்து யோசிப்பது நமது நலனை-உபாயத்தை ; இது தகாது என்று அன்னை சிக்ஷிக்கிறாள். அதற்குடையவன் எம்பெருமான். அவனே உபாயமாய் ரக்ஷகனாயிருக்க நாம் அதைப்பற்றி சிந்தித்து நையக் கூடாது. இதை மந்த்ரம் நமக்குக் காட்டித்தருவதால் அதுவும் ரக்ஷகமாகிறது. பகவானையே ரக்ஷகன் என்று நம்பியிருக்கும் நிலையை மந்த்ரம் உண்டாக்கித் தருவதால் மந்த்ரத்தையும் ரக்ஷகமாக எண்ணலாம். இந்த சுலோகத்தால் மந்த்ரார்த்தம் நம்மிடம் உண்டாகக்கூடிய தோஷங்களை நிவர்த்தித்து எப்படி நம்மை ரக்ஷிக்கிறது என்பது வலியுறுத்தப்படுகிறது. ஒவ்வொரு தோஷத்துக்கும் மந்த்ரத்தின் ஒரு பாகத்தை " ஸாது வித்யாத்-நன்றாக ஆராய்ந்தறிந்து தெளியவேணும்; தோஷ நிவர்த்தி பெறவேணும் என்கிறார்.

தேஹாத்மாபிமானம்-தேஹத்தையே, உடலையே, ஆத்மாவென்று எண்ணுகை ப்ரபலமான தோஷம். இது ஒரு படுகுழி. உடல் வேறு ஜீவன் வேறு என்று நன்றாக அறியவேணும். சரீரம் அசித்து-உணர்வற்றது. ஜடம் தானே விளங்காதது. ஆத்மா அஜடம்-ஸ்வயம்ப்ரகாசம்; தானே மற்ற உதவியில்லாமல் தீபஜோதி போல விளங்கக் கூடியது. சரீரத்துக்கு உருவுண்டு. ஸ்தூலம்; ஆத்மா அணுமாத்ரம், அதிஸூக்ஷ்மமானது; ஆத்மா அறிவாகவும் அறிவுயைடதாகவும் இருக்கும். சரீரம் அநித்யம்-மாறுபாடடைந்து கொண்டேயிருக்கும் துக்கத்துக்கு இருப்பிடம். ஆத்மா நித்யவஸ்து எப்போதும் ஒருபடிப்பட்டிருக்கும்; ஆநந்தமாயும் ஆநந்தமுடையதாயுமிருக்கும். ஆத்மாவைப் பற்றி இங்கு சொன்னவையெல்லாம்-அணு, ஆநந்தமயன், ஞானம், நித்யன், ஞானவான்

என்பதெல்லாம் ப்ரணவத்துள்ளீடான 'ம' என்ற அக்ஷரத்தினால் அறிவிக்கப்பட்டவை.

தேஹாஸக்த ஆத்மபுத்தி யதி பவதி. த்ருதீயம் ஸாது வித்யாத் தேஹத்தில் ஆத்மபுத்தி ஏற்பட்டால்-தேஹாத்மாபிமானமான பெருந்தவறு ஏற்பட்டால் (ப்ரணவத்தில்) மூன்றாவதான மூன்றாமக்ஷரமான- 'ம' என்பதை (மகாரார்த்தத்தை) ஸாது வித்யாத்-தெளிவாக அறியவேணும். இதனால் தோஷம் நிவர்த்திக்கப்படும் என்று கருத்து. ஆத்மஸ்வரூபத்தை உள்ளபடி அறிந்தால் அது தேஹத்தினின்றும் வேறுபட்டதென்ற தெளிவு பிறக்கும். இந்தத் தெளிவு பிறந்தால் தேஹத்துக்கு எந்தகேடுவந்தாலும் ஆத்மா கலங்காது. கலக்கம் தேஹாத்மாபிமானத்தின் காரியமாகும்.

ஸ்வாதந்த்ர்யாந்த: யதிஸ்யாத் - நமக்கு ஸ்வாதந்த்ர்யம் என்பது எப்போதும் கிடையாது. "அடியேன்" என்பது ஆத்மாவினுடைய வடிகட்டின-தீர்ந்த ஸ்வரூபம். பகவத் பாரதந்த்ர்யமே ஆத்மஸ்வரூபம். இந்த (ஸ்வதந்த்ரபுத்தி) தோஷத்துக்கு மருந்து ப்ரதமம் ஸாது வித்யாத்-அதாவது ப்ரணவத்தில் முதலாவதான அகாரத்தின் பொருள். அ காரம் பகவத்வாசகம். அ மட்டுமல்ல; அதன் மேலேறிக் கழியும் 'ஆய' (லுப்தசதுர்த்தி-மறையும் நான்காம் வேற்றுமை) வுடன் சேர்த்து மனதில் அநுஸந்திக்கவேணும். அ-வின் பொருள்: ஸர்வகாரணத்வ, ஸர்வரக்ஷத்வ, ஸர்வஸம்ஹாரகத்வ, லக்ஷ்மீபதித்வ, ஸர்வசேஷித்வ, ஸமஸ்த கல்யாணகுணாத்மகத்வ விசிஷ்டமான மஹாவிஷ்ணு. ஆக்கல், காத்தல், அழித்தல், திருமகள் கேள்வனாயிருத்தல், எல்லாவற்றையும் உடையவனாயிருத்தல், எல்லா நற்குணங்களுக்கும் இருப்பிடமாயிருத்தல் இவற்றுடன் கூடிய எம்பெருமான். எல்லாவிதங்களாலும் பகவானே ஸர்வஸ்வாமி (உடையவன், யஜமானன்); எல்லாவிதங்களிலும் ஆத்மா அவனின் சேஷவஸ்து (உடைமை, அடியவன்) என்று தெளிவாக அறிந்தால் ஸ்வாதந்த்ர்ய புத்தி அறவே விலகும்.

இதர சேஷத்வ தீச்சேத் த்விதீயம் ஸாது வித்யாத்-பகவானைத் தவிர்த்து இதரவிஷயங்களில் சேஷத்வ புத்தி தோன்றுமேல், ப்ரணவத்தில் இரண்டாவதான உ என்ற அவதாரணத்தின் பொருளை தெளிவாக அநுஸந்திக்கவேண்டும். அதாவது "பகவானுக்கே சேஷப்பட்டவன்; வேறு யாருக்குமில்லை" என்ற திடமான புத்தி. இது ஏற்படுவது உகாரத்தின் பொருளைத் தெளிவாக அறிவதால். பகவானுக்கே அநந்யார்ஹசேஷவஸ்து ஜீவாத்மா என்ற தெளிவு அவசியம்.

"கொண்டானையல்லதறியாத குலமகள் போல்." என்று ஆழ்வார் திருவாக்கு. பதிவ்ரதையான குலமகள் தன்புருஷன் ஒருவனையே யஜமானனாகப் பார்ப்பவள். இதுபோல ஜீவாத்மா புருஷோத்தமனான

எம்பெருமான் ஒருவனையே ஸ்வாமியாக அறியவேணும். இதரதேவதைகளையோ, ஸம்ஸாரிகளான அதிகாரிகளையோ (அரசன் போல்வார்) யஜமானனாக நினைத்தலாகாது. பகவான் நிருபாதிக ஸ்வாமி. கர்மமடியாக ஸ்வாமியாக (யஜமானனாக)த் தோற்றுபவர் உண்மையில் அப்படியல்ல. இதர தேவதாஸம்பந்தம் கூடாது என்பது த்வேஷபுத்தியினாலல்ல. வகுத்த விஷயத்தில் பாதிவ்ருத்யம் அவசியம். *திருவடிதன் நாமம் மறந்தும் புறந்தொழா மாந்தர்* ஆக இருக்கவேண்டும். பகவானைத்தொழ மறந்தாலும் மற்றொருதெய்வம் தொழாமை முக்கியம். *உனக்கே நாமாட் செய்வோம்* என்றார் கோதை பிராட்டியார்.

ஒரு பெரிய திருநாளில் நம்பெருமாள் வெளியூர் எழுந்தருளுகையில் எதிர்ப்பாராமல் பெருமழைவர, பெருமாளை அருகிலிருந்த ஒருதேவதாந்தர ஆலயத்தில் எழுந்தருளப்பண்ணினர். கூட எழுந்தருளிய உடையவர் வெளியிலே கொட்டும் மழையில் நின்றிருக்க, " பெருமாளுடன் உள்ளே எழுந்தருளலாகாதோ?" என்று அந்த ஆலயத்தார் அழைத்தனர். உடையவர் " பெருமான் ராஜாதி ராஜன், எல்லாம் அவனிடமாகையால் அவன் எங்கும் எழுந்தருள ப்ராப்தியுண்டு. நாம் அங்கு வந்தால் பிறர் மனைபுகுந்தவளாவோம்" என்று மழை விடுந்தனையும் வெளியிலேயே இருந்துவிட்டதாக சரித்திரம்.

≈ஆலயத்தருகில் சடகோபனும் த்யாஜ்யம்Λ என்றொரு முதுமொழி பெரியோர்கள் நடந்து செல்கையில் மனதுக்குள் திருவாய்மொழி அநுஸந்தானும் நடக்கும். இவ்வநுஸந்தானத்தின்போது «சடகோபன்» என்ற ஆழ்வார் திருநாமம் வரும்போது கைகூப்பி வணங்குவது மரபு. வழிநடக்கும் போது தேவதாந்தர ஆலயம் தென்பட்டால் அப்போது «சடகோபன்» எனும் பெயருக்குக் கைகூப்புதலும் தவிர்க்கப்படுமாம்.

# அஷ்டச்லோகீ-5

ரஹஸ்யத்ரய விவரணமாக ஸ்ரீபராசரபட்டர் அருளியுள்ள அஷ்டச்லோகீயில் நான்காவது ச்லோகத்தில் திருமந்த்ரம் நமக்களிக்கும் ரக்ஷணத்தை அநுபவித்துவரும் க்ரமத்தில் நம: பதம்காட்டுமர்த்தத்தை இப்போது மீண்டும் அநுபவிப்போம். ஞானிகளான நமது பெரியோர்களுக்கு மந்த்ரார்த்தமொழிய வேறு காலக்ஷேபமில்லை. ஞானி என்றால் ஸம்பந்தஜ்ஞானத்தைப் பூர்ணமாகவுடையவன். இவர்கள் பரமபாகவதோத்தமர்கள். காண்பவையெல்லாவற்றையும் பகவத்விபூதி- அவன் ஸ்ருஷ்டி, ஸொத்து-என்று அன்புடன் நோக்குமவர்கள், யாரிடமும் எதனிடமும் ஈஷத்தும்:- துளியும் த்வேஷபுத்தியில்லாதவர்கள். பகவான் ஸர்வசேஷி (எல்லாவற்றுக்கும் ஸ்வாமி, உடையவன்); நாம் அவனிட்ட வழக்காயிருக்கும் சேஷவஸ்து (உடைமை) என்று அறிவது ஸம்பந்தஜ்ஞானம். ஜ்ஞானிகளின் ஒவ்வொரு செயலும் திருமந்த்ரத்தின் அர்த்தத்துக்குச் சேர்ந்ததாயிருக்கும். பகவானுக்கு அடிமையாயிருந்தல் (சேஷத்வம்) அவனடியார்களுக்கும் (ததீயர்களுக்கும்) சேஷப்பட்டிருக்கையை உட்கொண்டது. ஒரு யஜமானனுக்கு அடிமைப்பட்டவன் க்ருஹயஜமானிக்கும் ஆட்செய்பவனாகப்பார்க்கப்படுவது உலக அநுபவம், பகவானுக்கு அடிமைப்பட்டிருக்கை பிராட்டிமார்கள், பகவானின் திருவடி ஸ்தாநீயரான ஆசாரியர்கள் மற்றும் அவனடியார்களாய் அவன் மிக விரும்பும் பாகவதர்கள் இவர்களுக்கும் அடிமைப் பட்டிருக்கையாம். இதுவும் ஸம்பந்தஜ்ஞானத்தில் முக்கியமான அம்சமாகும்.

இனி இந்த நாலாம் ச்லோகத்தின் பின்பாதியைக் காண்போம். **ஆத்மத்ராணோந்முகச்சேத் நம இதி ச பதம் ஸாது வித்யாத்** - தனது ரக்ஷணத்தில் ப்ரவ்ருத்தி (முயற்சி, செயற்பாடு) உடையவனானால் நம: பதத்தின் அர்த்தத்தைத் தெளிய ஆராய்ந்தறிந்து மீளவேணும். ப்ரணவத்தில் உகாரத்தினர்த்தம் அநந்யார்ஹ சேஷத்வத்தைக் காட்டுகிறது. அகாரவாச்யனான எம்பெருமானுக்கே உரியவன் மகாரவாச்யனான ஜீவன். 'பகவானுக்கே' என்ற அவதாரணத்தினால் பிறருக்கில்லை என்பது சொல்லாமல் விளங்கும். இதுவே அநந்யார்ஹசேஷத்வம் - பிறருக்கு சேஷப்படத் தகுதியில்லாமை. பகவானும் பாகவதர்களுமே (ததீயர்களுமே) உகந்த சேஷிகள் என்ற திடமான அறிவும் விச்வாஸமுமுடையவர்கள் பிறதெய்வங்களுக்கோ, லௌகிகமான அரசாங்க அதிகாரிகள், பந்துக்கள் பலருக்கும் தங்களை சேஷமாகக் கருதமாட்டார்கள். கர்மமடியாக இவர்களுக்கு நாம் சேஷப்பட்டிருப்பது உலக அநுபவம், தர்மசாஸ்த்ரங்களில் சொல்லப்படுபவை அநுஷ்டிக்கத்தக்கவையே. ஆனால் இவை தர்மபாலனங்கள் ஸாமாந்யதர்மங்கள், ஞானியான பாகவதோத்தமனுக்கு

விசேஷ தர்மங்களே வழி காட்டியாக நிற்கும். கூறை சோற்றுக்காகத் தம்மைப் பிறருக்கடிமைகளாக்கிக் கொள்வது தகாது; பாபமும் கூட. * கூழாட்பட்டு நின்றீர்களை (மங்களாசஸனபார்களான) எங்கள் குழுவினில் புகுதலொட்டோம் *என்பது பெரியாழ்வார் திருவாக்கு.

ஆத்மக்ஷேமத்தைப் பண்ணிவைக்க பகவானிருக்கிறான். லோகயாத்ரை- சரீரயாத்ரை-கர்மாநுகுணமாக நடக்கும். நமது விருப்பு கொண்டு செய்வது யாதுமில்லை. சிறைச்சாலையில் சிறை வைத்தவனை அரசன் பார்த்துக் கொள்வது போல சரீரமென்னும் சிறையில் அடைந்துள்ள ஜீவனின் க்ஷேமம் எம்பெருமான் பொறுப்பு. சரீரத்திலிருப்பு கர்மாநுகுணமாக வந்தது. அந்த கர்மாநுகுணமாகவே பகவான் ரக்ஷித்துப் போருவான். ஆக ஆத்மக்ஷேமத்துக்கோ, தேஹத்துக்காகவோ நாம் செய்ய வேண்டியது ஒன்றுமில்லை. இதற்காகக் கறையவேண்டா-இது எம்பெருமானாரின் சரமோபதேசங்களில் (தமது அந்திம தசையில் அருளியவை) ஒன்று.

தனது ரக்ஷணத்தில் தானே முயற்சியுடைமை ஒரு அபசாரம். இதைத் தடுத்துக் கொடுப்பது நம: பதத்தினர்த்தம், நமக்கு நாமே ரக்ஷகரன்று; பிறரும் ரக்ஷகரன்று. ஸ்வரக்ஷணத்தில் நமக்குத் துளியும் ப்ராப்தி (தகுதி, உறவு) கிடையாது. இது இருக்கவே கூடாது. ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயமாவது (தனது ரக்ஷணத்தில் தானே முயலுகை) பகவானைத் தவிர்த்து இதரஸாதனங்களை பேற்றுக்கு உபாயமாக அநுஷ்டிக்கை. கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம் முதலான நம் முயற்சியால் அநுஷ்டித்துத் தலைக்கட்டுமவையெல்லாம் ஸாதநாந்தரம், உபாயாந்தரம் என்ற பெயர்களால் குறிக்கப்படும்.'களைவாய் துன்பம்களையாதொழிவாய் களைகண்மற்றிலேன்' (திருவாய்மொழி) என்கிறபடியே எம்பெருமானையே உபாயமாகக் கொண்டு, "ஸாதநாந்தரங்கள் நமது சேஷத்வ பாரதந்த்ர்ய ஸ்வரூபத்துக்கு சேராது" என்று அவைகளில் ஒட்டற்றிருக்கை மிகவும் அவசியம். தேவதாந்தர ஸம்பந்தம் ஒரு பெரிய படுகுழி. இதில விழாமல் நம: பதத்தினர்த்தம் நம்மைக் காக்கும். ஸம்பந்தஜ்ஞானத்துக்குச் சேர்ந்த ஒழுக்கம் முதலான இங்கு சொன்னவைகளான அநுஷ்டானம் ஸம்ஸாரிகளுக்கு ஏற்படுவது மிகவும் கடினம். அவனருளால் தான் ஏற்படவேண்டும்.

'உனக்குப்பணி செய்திருக்கும் தவமுடையேன்-இனிப் போய் ஒருவன்தனக்குப்பணிந்து கடைத்தலைநிற்கை நின் சாயையழிவு கண்டாய்' என்று பெரியாழ்வார் திருமாலிருஞ்சோலையெம்பெருமானிடம் விண்ணப்பிக்கிறார். "அடியேன் தேவரீது திருவருளினால் முதலிலே அடியவனென்ற (சேஷத்வ) ஞானமுள்தூண்ட தேவரீரது கைங்கர்யத்திலேயே போது போக்குமவனாய், இருக்கின்றேன். இந்த

நன்மைகளெல்லாமுண்டான பின்பு அடியேன் வேறொருவனுக்குப் பணிந்து அவன் தலைவாசலில் அற்ப பயனைவேண்டி நின்றால் தேவரீரது பெருமேன்மைக்கு இழுக்காகும்-அப்படி நேராமல் ரக்ஷித்தருளவேண்டும்". ப்ராக்ருதிஸம் பந்தத்தை அறுத்துத்தரவேணுமென ஆழ்வார் வேண்டுகிறார். நம: என்பது "எனக்கு (அடியேனது ரக்ஷணத்துக்கு) நானுமில்லை; பிறருமில்லை; நீயே கடவாய்" என்று அவனிடம் விண்ணப்பிப்பதாகும்.

இனி நாராயண பதம் ரக்ஷிக்கும்படி: **பாந்தவாபாஸலோல: சேத், நாராயணாக்யம் சப்தம் ஸாது வித்யாத்.** ஆபாஸ பந்துக்களிடம் தேஹ ஸம்பந்த உறவினர் ஆசை தோன்றுமேல்; அதாவது கர்மமடியாகவரும் உறவுமுறைகளை ஆபாஸபந்துத்வம் என்கிறது. ஒரு காரணமடியாக வருவது ஸோபாதிகம். சரீரம் கர்மமடியாகவருவது. தேஹபந்துக்களை ஆபாஸபந்துக்கள் என்கிறது. நிருபாதிகமான ஸர்வவிதபந்து நாராயணன் ஒருவனே. சரீரமடியாக வந்த உறவுகளில் பற்று ஏற்பட்டால் "நாராயணனே ஸர்வவிதபந்து" என்று தெளிந்து பாபம் தவிர வேண்டும். கத்யத்தில் எம்பெருமானால் அநுஸந்திக்கும் பூருவர் வசனம்.

**பிதரம் மாதரம் தாராந் புத்ராந் பந்தூந் ஸகீந் குரூந்**

**ஸர்வதர்மாம்ச்ச ஸந்த்யஜ்ய ஸர்வகாமாம்ஸ்ச ஸாக்ஷராந்**

**லோகவிக்ராந்த சரணௌ சரணம் தேரவ்ரஜம்விபோ**

**பிதாஸிலோகஸ்ய சராசரஸ்ய ………………**

"தாய், தந்தை, தாரம், மகள், உறவினர் யாவரையும் முற்றும் துறந்து உலகளந்த உனது பொன்னடிகளில் சரணம் புகுகிறேன்" என்றும் "நீயே இவ்வுலகங்களுக்கெல்லாம் தந்தை ரக்ஷகன்" என்றும் சொல்லுகிறபடியால் ஸர்வவிதபந்துவான எம்பெருமான் பற்றத்தகுந்தவன் என்றும் மற்ற (ஆபாஸ சரீரமடியாக வரும்) பந்துக்கள் ஆசைவைக்கத்தகுந்தவரல்லர் என்பதும் தெரியும். ஆனால் ஒன்று-பகவதநுபவத்துக்கு அநுகூலர்களாகில் தேஹபந்துக்களும் போற்றத்தக்கவர்களே. ஸந்யாஸம் வாங்கிக் கொண்டபோதும் ஆத்மகுணபூர்த்தி படைத்த தமது மருமகனான முதலியாண்டானுடைய உறவை எம்பெருமானார் விடவில்லை என்பது ப்ரஸித்தமன்றோ?

ஆக, தேஹபந்துக்களிடம் பாசத்தை விட்டொழிக்க வேண்டும் என்பதை நாராயணபதம் வலியுறுத்தும். இதில் நமக்கு வழிகாட்டிகள் ப்ருந்தாவனத்து கோபிகைகள், யாவற்றையும், விட்டு கண்ணனைப் பற்றின அவர்களின் க்ருஷ்ணபக்திக்கு ஈடேகிடையாது. *கொண்டபெண்டிர் மக்கள் உற்றார் சுற்றத்தவர் பிறரும் கண்டதோடுபட்டதல்லால் காதல் மற்று யாதுமில்லை; துணையும் சார்வும் ஆகுவர் போல் சுற்றத்தவர் பிறரும்

அனையவந்த ஆக்கமுண்டேல் அட்டைகள் போல் சுவைப்பர்' என்பது நம்மாழ்வார் திருவாய்மொழி. (9-1-1,2) 'சேலேய் கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும் மேலாத்தாய்தந்தையும் அவரேயினி ஆவாரே' (திருவாய் 5-1-8) (அவரே-பகவானே) என்று நம்மாழ்வாரும் 'எம்பிரான் எந்தை என்னுடைச்சுற்றம் எனக்கரசு என்னுடையவாணாள்' (திருமொழி 1-1-6) என்று திருமங்கையாழ்வாரும் கூறுமது நினைவிற்கொள்ளற்குறியது. தேஹபந்துக்கள் ரக்ஷகராகார்கள். பொருளுள்ளவரையில் தான் அவர்கள் உறவு; அதிருக்கும்போது அட்டைகள் போல் சுவைப்பர். அதுதீர்ந்தால் உறவும் விட்டுவிடும். எம்பெருமான் நிருபாதிகபந்து வாதலால் இவன் உறவு எப்போதும் விடாது. இளையபெருமாள் ஸுமந்த்ரனிடம் சொன்னது: "மஹாராஜாவை நான் பிதாவாக எண்ணவில்லை . ப்ராதா, பர்த்தா, பந்து, பிதா எல்லாம் எனக்கு ராகவனே (பெருமாளே)"*என்று.'மஹாராஜா' என்று உறவறுத்துப் பேசுவதை நோக்கவேணும். தாய்தந்தையர்களும் தஞ்சம் (ரக்ஷகராக) ஆகமாட்டார்கள். சகுந்தலை, திருமழிசைப்பிரான் இவர்கள் சரித்திரம் இவ்விஷயத்தில் உதாரணங்கள். மாதா பிதா ப்ராதா நிவாஸச்சரணம் ஸுருத் கதிர் நாராயண: என்று ஸுபாலோபநிஷத்வாக்யம், தாய், தந்தை, உடன்பிறந்தவன், வாழுவிடம், நண்பன், புகல் எல்லாம் நமக்கு நாராயணனேயாவான்.

கடைசியாக, **விஷயசபல தீச்சேத், சதுர்த்தீ ஸாது வித்யாத் ப்ரபந்ந:-** விஷயங்கள் என்பது சப்தம், ரூபம், ரஸம், கந்தம் எல்லாவற்றையும் குறிக்கும். நிஷித்தம், என்பது நமக்கு எப்போதும் தகாதது. சாஸ்தரங்களாலும் விலக்கப்பட்டவை, உண்ணத்தகாத பண்டங்களை ஜீஹ்வா (நாக்கு) சாபல்யத்தால் உண்பது ஒரு உதாரணம், விஹிதம் என்பது ஸாமான்ய சாஸ்த்ரத்தை. தர்மபத்நியுடன் கலப்பது சாஸ்த்ரஸம்மதமாயினும் ஆத்மஸ்வரூபம் கைவந்தவன் இதில் சபலம் கொள்ளமாட்டான். பொதுவாக 'விஷயம்', 'அபிமதவிஷயம்' என்று ஸ்த்ரீகளையே பெரும்பாலும் பேசுகிறார்கள். ஆழ்வார் நமக்கு உபதேசம் பண்ணும்போது "வீடுமின் முற்றவும்" என்று முதல்முன்னம் அருளுகிறார். "பகவானைத்தவிர மற்றதெல்லாவற்றையும் பூரணமாக விட்டுவிடுங்கோள்" என்றபடி. ஒரு குழந்தை அறியாமையால் ஒரு பாம்பைப் பிடித்தது என்றால் தாய் முதலில் "விடு-விட்டு விடு" என்றுதான் கத்துவாள். அப்படியே ஆழ்வார் "வீடுமின்" என்று முதலில் சொல்லி, "முற்றவும்"என்று பிறகு கூறுகிறார். ≈பற்றிலார் பற்ற நின்றானே∆ (திருவாய்மொழி7-2-7) என்பதற்கு 'உலகப் பற்றை விட்டவர் பற்றிநிற்கும் பெருமானே" என்றும் ஒருபொருள் கூறலாமன்றோ? விஷயசபலம் ஏற்பட்டால் அதைத்தவிர்த்துக் கொடுக்க நாராயணாய என்றதில் ஆய என்ற சதுர்த்தியை (4ம் வேற்றுமையுருபு) நினைக்கவேண்டும்.

மாற்பால்மனம் சுழிப்ப மங்கையர் தோள்கைவிட்டு' என்பர் (3 திரு-14) பேயாழ்வார். (மால்=திருமால்) ச்ரிய:பதியான எம்பெருமான் ஒருவனையே ஆசைப்பட்டு வழிபட வேண்டும். மற்ற விஷயங்களிலாசையுடையவனுக்கு அவன் கிடைக்கமாட்டான். அவனே போக்யன் என்று அறிவது அவசியம். மற்றவிஷயங்கள் போக்யங்கள் (அநுபவிக்கத்தக்கவைகள்) அல்ல. இதரவிஷயங்களில் போக்யதாபுத்தி அறவே கூடாது. இப்படி அநந்யபோக்யத்வம் என்ற ஒழுக்கத்துக்கு வ்யக்தசதுர்த்தி எனப்படும் 4-ம் வேற்றுமை உதவுகிறது.

நாராயணாய- நாராயணன் பொருட்டு-நாராயணனுக்காக நான் பண்ணும் கைங்கர்யம் அவன் மகிழ்ச்சிக்காகவே ஆக வேண்டும்; எனக்காகவல்ல வகுத்தவிஷயத்தில் கைங்கர்யத்தினால் மகிழ்வது ப்ராப்தமேயாகிலும் நமது மனப்பான்மை அப்படி அமையக்கூடாது- மற்றைநங்காமங்கள் மாற்று-என்று அறிவுடையோர் சிக்ஷித்துக் கொடுக்கின்றனர். அப்படியிருக்கும்போது தோஷம் நிறம்பியவையும், ஸுகம்போல் தோற்றி உண்மையில் துக்கத்தை விளைவிப்பவைகளுமான சரீரஸுகங்களில்-விஷயங்களில்-மண்டி நிற்பது எவ்வளவு நிஹீநம் (தாழ்ந்தது) என்பதை அறிய ஆய என்ற வயக்த சதுர்த்தியினர்த்தத்தை நினைத்துத் தெளியவேணும்.

திருமந்த்ரத்தில் அவசியம் அறியவேண்டுமர்த்தங்களான ஐந்தர்த்தங்கள் ப்ரணவத்தினால் ஆத்மஸ்வரூபம், அகண்ட நமஸ்ஸினால் உபாயஸ்வரூபம், ஸகண்டநமஸ்ஸில் ஆறாம் வேற்றுமையுடைய 'ம' வினால் விரோதி ஸ்வரூபம், நாராயண பதத்தினால் பரமாத்மஸ்வரூபம், வ்யக்த சதுர்த்தியால் ப்ராப்ய (பல) ஸ்வரூபம் சொல்லிற்றாயிற்று. இவை முன் கட்டுரைகளின் விளக்கப்பட்டுள்ளனவாகையால் மீண்டும் விளக்கவில்லை.

எம்பெருமானுக்கும் நமக்கும் ஒன்பது விதமான உறவுகள் உண்டு. இதை "பிதாச ரக்ஷகச்சேஷீ பர்த்தா ஜ்ஞேயோ ரமாபதி: ஸ்வாம்யாதாரோ மமாத்மா ச போக்தா சாத்யமநூதித":|| என்பதனால் அறியலாம். ஜகத்காரணத்வத்தைச் சொல்லும் அகாரம் ஸ்ரீமன் நாராயணன் பிதா (தந்தை) என்ற உறவையும், ரக்ஷகன் என்பதைச் சொல்லும் அகாரம் அவன் ஜகத்ரக்ஷகன் என்பதையும் 'அ' வின் மேல் மறையும் (லுப்த) சதுர்த்தியின் பொருளினால் சேஷித்வமும் (அவனேஸ்வாமி என்பதும்), அவனுக்கே - பிறருக்கல்ல என்று அநந்யார்உறத்தைச் சொல்லும் உகாரத்தினால் ம ஜீவன் ஞாதா (அறிபவன்) என்பதால் பரமன் அறியபடுமவன் (ஜ்ஞேயன்) என்பதும், நாராயணபதத்தின் "நாரங்களுக்கு இருப்பிடம்"என்ற (தத்புருஷ) பொருளினால் ஸ்வாமித்வமும் ஆதராத்வமும், நாராயணபதத்தின்

"நாரங்களை இருப்பிடமாகவுடையவன்" என்ற (பஹுவ்ரீ) பொருளினால் அந்தர்யாமியாய் ஜீவனுக்குள் ஆத்மாயிருப்பவன் என்பதால் ஜீவன் சரீரம், ஈச்வரன் ஆத்மா என்பதும் "நாராயணாய" என்பதிலுள்ள (ஆய-வ்யக்த சதுர்த்தி) நாலாம் வேற்றுமையால் கைங்கர்யரூப போகத்தில் நம: என்பதால் நமக்கு அந்வயமில்லை என்று தேறுவதால் அவனே போக்தா என்பதும் தெளிவாகின்றன. விரிவுகஞ்சி இத்துடன் நிறுத்துகிறோம். இவையாவும் முன்கட்டுரைகளில் விண்ணப்பிக்கப்பட்ட விஷயங்களே. இத்துடன் திருமந்த்ர விளக்கம் முடிவடையும்.



ஸ்ரீ புண்டரீகவல்லீ - ஸ்ரீ கோவிந்தராஜன் (திருச்சித்ரகூடம்)

# அஷ்டச்லோகீ - 6

## த்வயார்த்தம்-1

ஸ்ரீ பராசரபட்டர் ரஹஸ்யத்ரய வ்யாக்யானமாக ஸாதித்தருளிய அஷ்டச்லோகீயில் முதல் நாலுச்லோகங்களால் மூலமந்த்ரமான திருவஷ்டாக்ஷரத்தை விளங்கக் கூறி மேலே அம்மூலமந்த்ரத்தை விவரிப்பதாய் நமது ஆசாரியர்கள் மிகவுமாதரித்துப் போரும் அநுஸந்தாநமந்த்ரமாய், அநுஷ்டானத்தை விளக்குவதாயமைந்துள்ள மந்த்ரரத்னத்தை-த்வயத்தை-இரண்டு ச்லோகங்களால் விளக்கமாகவருளிச் செய்கிறார். முதலில் மந்த்ரரத்னத்தில் பதார்த்தங்களை விவரித்தருளி மேல் ச்லோகத்தினால் வாக்யார்த்தத்தையருளிச் செய்கிறார்.

**நேத்ருத்வம் நித்யயோகம் ஸமுசிதகுணஜாதம் தநுக்யாபநஞ் சோபாயம்**
**கர்தவ்யபாகம் த்வத மிதுநபரம் ப்ராப்யமேவம் ப்ரஸித்தம் |**
**ஸ்வாமித்வம் ப்ரார்த்தநாம் ச ப்ரபலதரவிரோதிப்ரஹாணம் தசைதாந்**
**மந்தாரம் த்ராயதே சேத்யதிகதநிகம: ஷட்பதோயம் த்விகண்ட: ||** 5

நிகமத்தில் (வேதத்தில்) சேர்ந்ததாய், இரண்டுவாக்யமாய், ஆறுபதங்களாய், அநுஸந்திப்பவரை (மந்தாரம்) ரக்ஷிப்பதாகவுள்ள (இந்த த்வயமந்த்ரம்) பத்து அர்த்தங்களைச் சொல்லுகிறது. **நேத்ருத்வம்**-புருஷகாரத்தையும் (ஸ்ரீ) **நித்யயோகம்**-பிராட்டிக்கும் பகவானுக்குமுள்ள நித்யஸம்பந்தத்தையும் (மத்) ஆச்ரயணத்துக்கு உசிதமான கல்யாண குணச்சேர்க்கையையும் («நாராயண») விலுள்ள **ஸமுசிதகுண ஜாதம்**), திவ்யமங்கள விக்ரஹத்தை ப்ரகாசிப்பிக்குமதான **(தநுக்யாபநம்)** திருவடிகளையும், ஆறான உபாயத்தையும், செய்யத்தக்கதையும் **(கர்த்தவ்ய பாகம்**-ப்ரபத்யே என்பது), அதன்பின்னர், உயர்ந்தபேறான திவ்யதம்பதிகளையும் **(மிதுநபரம் ப்ராப்யம்)**, நாராயணபதார்த்தமான) ஸ்வாமித்வத்தையும், கைங்கர்யப்ரார்த்தனையையும் (ஆய-வில் சொல்வது), மிகவும் பலமுள்ள விரோதிகளை (அஹங்காரமமகாரங்களை) விடுவதையும் **(ப்ரபலதரவிரோதி ப்ரஹாரணம்)** ஆன பத்தர்த்தங்களைச் சொல்லும்.

**ஷட்பதோயம்த்விகண்ட:**-என்பதனால் த்வயம் ஆறுபதங்களாலானது; இரண்டு கூறுகளாய் (இரண்டுவாக்யம்) இருக்கும் என்பது காட்டப்படும். ஸ்ரீமந்நாராயணசரணௌ, சரணம், ப்ரபத்யே (3) ஸ்ரீமதே, நாராயணாய, நம: (3) என்று முதற்கூற்றில் மூன்றும் பிற்கூற்றில் மூன்றுமாக ஆறு பதம், இரண்டு வாக்யம். முதற்கூறு திருமந்த்ரத்தில் நம: என்ற நடுப்பதத்தையும் பிற்கூறு நாராயணாய என்ற கடைப்பதத்தையும் விவரிப்பவையாம். முமுக்ஷுவுக்கு (மோக்ஷத்திலாசையுடையவனுக்கு) அறியவேண்டிய

ரஹஸ்யங்கள் மூன்றிலும் வைத்துக் கொண்டு இந்த த்வயமொன்றில் தான் எம்பெருமானின் திருவடிகளுக்கு வாசகமான சரணௌ என்ற சப்தமுண்டு. அதுபோல பிராட்டிக்கு வாசகமான ஸ்ரீ சப்தம் வெளிப்படையாயுள்ளது இந்த மந்த்ரத்தில் தான், மற்ற இரு ரஹஸ்யங்களிலுமில்லை. தாய்ப்பாலில் வளரவேண்டிய குழந்தைக்குத் தாயின் மார்பகம் பற்றுவதற்கு முக்யமாமாபோலே அடியவர் இழியுமிடம் திருவடிகள் (சரணங்கள்). ஸ்ரீ சப்தமும் சரணசப்தமும் வ்யக்தமாகவுள்ளபடியால் இந்த மந்த்ரரத்னம் ஆசார்யருசி பரிக்ருஹீதமாயிற்று (மிகவும் விரும்புவதாயிற்று). மணவாள மாமுனிகளின் திநசர்யையில் "மந்த்ரரத்நாநுஸந்தாந ஸந்தத ஸ்புரிதாதரம்" மந்த்ரரத்நத்தை தொடர்ந்து அநுஸந்திக்கையால் (சொல்லுகையால்) துடிக்கும் உதட்டையுடையவர்-என்று காணலாம். அதன் அர்த்தாநுபவம் திருமேனியில் பொலிந்துகாட்டும். தாஸ்யத்தை நிரூபகமாகவுடைய (எம்பெருமானுக் கடிமையாயிருத்தலை அடையாளமாகவுள்ள) சேதனனுக்கு, பெரியபிராட்டியாரை புருஷகாரமாகப் பற்றி, நாராயணன் திருவடிகளை உபாயமாகப் பற்றுவது அநுஷ்டிக்கத் தகுந்தது. இதை ப்ரகாசப்படுத்துவது த்வயமந்த்ரமாம். "மந்தாரம் த்ராயேதே இதி மந்த்ர: - மநதில் அநுஸத்திப்பவனை ரக்ஷிப்பது' மந்த்ரமாம்" வேதத்தில் சேர்ந்த த்வயமந்த்ரம் இரண்டு வாக்யமாய், ஆறுபதமாய், பத்தர்த்தங்களைச் சொல்வதாயுள்ளது.

த்வயமந்த்ரத்திலுள்ள «ஸ்ரீ» ச்லோகத்தில் நேத்ருத்வம் என்பதால் சொல்லப்பட்டது. இதுபோல முறையே மத்=நித்யயோகம்; நாராயண= ஸமுசிதகுணஜாதம்; சரணௌ-தநுக்யாபநம் (திருமேனி திருவடிகளால் காட்டப்பட்டது); சரணம்=உபாயம், ப்ரபத்யே கார்த்தவ்யபாகம், இதுவரை பூர்வவாக்யம். இதில் ஆறு அர்த்தங்கள் கூறப்பட்டன. இனி அதன் மேலுள்ள உத்தர வாக்யத்தில் ஸ்ரீமத்-மிதுநபரம் ப்ராப்யம் நாராயண= ஸ்வாமித்வம் ; ப்ரார்த்த நாம்=ஆய ப்ரபலதரவிரோதி ப்ராஹணம்= நம: என்று நாலு அர்த்தங்கள்.

ஸ்ரீ சப்தத்துக்கு ஆறு அர்த்தங்களுண்டு. இவற்றுள் முக்கியமானவை சேதநர்களால் ஆச்ரயிக்கப்படுகிறாள் ஸேவிக்கப்படுகிறாள் (கர்மணிவ்யுத்பத்தி என்பர்) ஷ்ரீயதே ஷ்ரயதே பகவானை இவள் ஆச்ரயித்கிறாள்-பத்நி என்ற முறையில் ஸேவிக்கிறாள் (கர்த்தரிவ்யுத்பத்தி). இப்படி சேதநர், பகவான் இருவிடங்களிலும் இவளுக்கு ஸம்பந்தமுண்டு. ஆகையால் சேதனரையும் பகவானையும் சேர்த்து வைக்க வாய்ப்புண்டு. நேத்ருத்வம் (நயதி-அழைத்துச் செல்லுகிறாள் என்ற பாவத்தில்) கடகத்வம் (சேர்ப்பிக்கை) என்று பொருள்படும். இதுவே புருஷகாரம்.

எம்பெருமானுடைய அபயமுத்ரை "நான் உன்னை எல்லா பாபங்களிலிருந்தும் விடுவிக்கிறேன்-வருந்தாதே" என்று தெரிவிக்கிறது. ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி;Δ அபயம்ஸர்வ பூதேப்யோததாமி "சரணம் பற்றிய உன்னை ரக்ஷிக்கிறேன்" என்றபடி. பெரிய பிராட்டியாருடைய அபய முத்திரை "பவேயம் சரணம் ஹிவ:":- உமக்குப் புகலாயிருக்கிறோம். சரணமளித்து ரக்ஷிக்கிறேன் என்கிறது. எம்பெருமானுடைய ஸ்வாதந்த்ர்யத்தை நினைத்து பயப்படவேண்டாம் என்ற அபயத்தையும் செய்து தருகிறது. இது பிராட்டியின் இயல்பு. சரணம்பற்றிய விபீஷணனை ரக்ஷித்தார் பெருமாள். சரணம்பற்றாமலிருந்தவராயினும் ராக்ஷஸிகளை நலியவிடாமல் ரக்ஷித்தாள் பிராட்டி. பெருமாள் விஜயத்தைத் திருவடி வந்து பிராட்டியிடம் சொல்லி அவரை நலிந்த அரக்கிகளைத் தம் கையில் தண்டனை பெறும்படி காட்டித்தர வேண்ட, "இவர்களுக்குக் கருணை காட்டு; உலகத்தில் யார்தான் குற்றம் செய்யவில்லை?" என்று வேண்டி அவர்களைப் பிராட்டி ரக்ஷித்தாள். யாவரும் லோகமாதாவான பிராட்டியின் பிரஜைகள். தனது குழந்தைகளைத் தன்னைப் பற்றாவிடினும் தாயானவள் இயல்பாக ரக்ஷிப்பாள். மிகவும் பாபம் பண்ணிய நாம் அவனிடம் ரக்ஷணம் வேண்டி நிற்கும் போது நம் பாபம் கண்டு அவன் சீறி விலக்காமல் அவனைத் தனது அழகைக்காட்டி மறக்கச் செய்து அவனுடைய வாத்ஸல்யம், காருண்யம் முதலான குணங்களை விளங்கச் செய்து, நம்மைச் சேர்த்துக்கொள்ளும்படி பண்ணுகிறாள். இப்படி சிபாரிசு செய்வதே புருஷகாரம். இரண்டும் ஒரே பொருளைக் குறிப்பன.

நித்யயோகம்-ஸ்ரீமத் என்பது; «மத்»என்ற மதுப்பாலே, என்றும் பிரியாத நித்யயோகம்-இடைவிடாதஸம்பந்தம் சொல்லப்படுகிறது. "நித்யைவைஷா ஜகந்மாதா விஷ்ணோ ஸ்ரீரநபாயிநீ" - (விஷ்ணுபுராணம்) (திருவாய் 6-10-10)* *அகலகில்லேன் இறையும் என்று அலமேல் மங்கை உறைமார்பன் எம்பெருமான். எந்த சேதனன் எப்போது வந்தாலும் அச்சமயம் அவன் பகவந்நிக்ரஹத்துக்கு பாத்ரமாகாமல் ரக்ஷிக்க அவனைவிட்டு எப்போதும் பிரியாமல் ஸதா சேர்ந்தே இருக்கிறாள் பிராட்டி.

ஸமுசிதகுணஜாதம் - ஆச்ரயணத்துக்கு உதவும் குணங்கள் வாத்ஸல்யம், ஸ்வாமித்வம், ஸௌசீல்யம், ஸௌலப்யம், ஞானம், சக்தி, பூர்த்தி, ப்ராப்தி- என்று எட்டு. இவற்றுள் முதல் நான்கு ப்ரதானம். 'நிகரில் புகழாய்! "உலகம் மூன்றுடையாய்" என்னையாள்வானே! சுரர்கள் முனிக்கணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே! (திருவாய்-6-10-10) என்றபதங்களால் காட்டப்பட்டன. இவைகளைப் பிராட்டி விளங்கச் செய்கிறாள். வாத்ஸல்யம்-கன்றினிடம் தாய்ப்பசு காட்டுமன்பு. பிழை காணாமையும்,

தோஷத்தையும் குணமாகக் கொள்கையும். இதுவே நிகரில் புகழாம். ஸ்வாமித்வம்-ஜகத்தையெல்லாம் உடையவனாயிருக்கை; ஸ்வாமியாதலால் ஸொத்தை ரக்ஷிக்க ப்ராப்தியுடையவன். "உலகம் மூன்றுடையாய்!" ஸௌசீல்யம்மிகப் பெரியவன் மிகச் சிறியவனுடன் ஒரு நீராகக்கலப்பது. "என்னை ஆள்வானே" (நீசனான என்னையும் ஆள்பவனே): ஸௌலப்யம் எளிதில் கிட்டக்கூடியவன்-சுரர்கள் முனிக்கணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே! (யாவரும் வந்து வணங்கும்படி திருமலையில் வந்து நித்யவாஸம் பண்ணுமவனே! )

தநுக்யாபாநம்-தநு என்பது திவ்யமங்கள விகரஹத்தை; அதை ப்ரகாசிப்பிப்பது திருவடிகள். இதனால் சரணௌ என்பதனர்த்தம் சொல்லப்பட்டது. திருவடி திருமேனிக்கு உபலக்ஷணம்; ஒரு அம்சத்தைச் சொல்வதால் முழுதும் சொன்னதாக ஆகும். திருமேனி சுபாச்ரயமாய் பற்றுவதற்கு, மனதில் கொள்வதற்கு எளிதாயிருக்கும். விக்ரஹவிசிஷ்டனான எம்பெருமானைச் சொல்லிற்று. திருவடிகளைப்பற்றினால் கட்டாயம் க்ருபை சுறக்கும். உபாயம்-இது சரணம் என்பதைச் சொல்லும். புகலாக, கரீந்தவ்யபாகம்-அநுஷ்டிக்கவேண்டியது. இது 'ப்ரபத்யே' யினர்த்தம்.

அத-மேலே; உத்தரவாக்யார்த்தம் சொல்லப்படுகிறது. **மிதுநபரம்** மிதுனம்=சேர்த்தியான இரட்டை-பிராட்டியும் பெருமாளும், **பரம்**-உத்க்ருஷ்டம்-மேலானது; மேலான பிராப்யமாம். **ஏவம்**-எவ; திவ்யதம்பதியே **ப்ராப்யம்**-அடையத்தக்கபேறு என்கிறது. **ப்ரஸித்தம்**-இது உலகமறிந்தது. "பவாம்ஸ்து ஸஹவைதேஹ்யா கிரீஸாநு , ரம்ஸ்யஸே அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரத: ஸ்வபதச்சதே" என்று இளையபெருமாள் திருவாக்கு. பிராட்டியுடன் தேவரீர் வனத்தில் லீலாரஸமநுபவிக்கையில் தூங்கும்போதும் விழித்திருக்கையிலும் எல்லாவடிமைகளையும் அடியேன் செய்யக்கடவேன். **மிதுநபரமேவ ப்ராப்யம்**-இது ஸ்ரீராமாயணத்தில் ப்ரஸித்தம்.

**ப்ரார்த்தநா**-'அஹம் ஸர்வம் கரிஷ்யாமி"எல்லா காலங்களிலும் எல்லா நிலைகளிலும் அடியேன் எல்லாவடிமைகளையும் செய்யப்பெறுவேனாக வேண்டும். இது-நாராயணாய என்பதில் ஆய என்ற நான்காம் வேற்றுமையினர்த்தம். ஸ்ரீமதேநாராயணாய-இந்த கைங்கர்யத்துக்கு ப்ரதிஸம்பந்தி (பெற்று உகப்பவர்) திவ்யதம்திகள்-மிதுநபரம். **ப்ரபலதர ப்ரஹாணம்**-அதி ப்ரபலமான விரோதி விட்டுபோகை. இது நம: சப்தத்தினர்த்தம். ப்ரபலதர விரோதியாவது-தன்னை போக்தாவாக-உகப்பவனாக எண்ணுகை. வகுத்த கைங்கர்யத்தினால் உகப்பு ஏற்படக்கூடும். ஆனால் உகப்பு தன்னதாக எண்ணக்கூடாது, கைங்கர்யத்துக்கு உகப்பவன் அவனே என்ற மனநிலை அவசியம். ஆளவந்தாரும் ~கதா **ப்ரஹர்ஷயிஷ்யாமி**Δ கைங்கர்யத்தினால் எப்போது உன்னை உகப்பிக்கப்

போகிறேன்? என்று பாரிக்கிறார். கைங்கர்யத்தினால் வரும் போகம்-இன்பம் தமக்கன்று. "மற்றைநங்காமங்கள் மாற்று"என்று ஆண்டாள் காட்டியருளிய அர்த்தம் இதுவே. ப்ரீஹாணம்-விரோதி ஸவாஸனமாகப் போகை அஹங்காரமமகாரங்கள்- நான்கைங்கர்யம் பண்ணினேன்; இதனால் வரும் இன்பம் எனது என்ற எண்ணம் துளியும் கூடாது. *படியாய்க் கிடந்துன் பவளவாய் காண்பேனே-நமது பாரதந்த்ரயத்துக்குச் சேர அவன் கார்யங் கொள்ள (படியாய்க்கிடந்து) உகப்பதற்கு சைதன்யமுடைமையால் (அறிவுள்ளமையால்) எதிர் விழிதர வேணும். அவனுகப்பைப் பெருக்கவேணும். பவளவாய்-அவன் உகப்பைக் காட்டுவது. காண்பேனே-அதைக்கண்டு சேதனன் உகக்கவேணும்.

தசைதாந்—ஏதாந்; தச-இவை பத்து. பத்து அர்த்தங்கள் என்று முன்னமே காட்டப்பட்டது. மந்தாரம்-த்ராயதே-அநுஸந்திப்பவனை ரக்ஷிக்கும் மந்த்ரம். ஷட்பத: அயம் த்விகண்ட: ஆறுபதமாய் இருப்பதும் முன்னரே விளக்கப்பட்டது. அதிகத நிகம இந்த த்வயமந்த்ரம் கடவல்லி முதலான உபநிஷத்துக்களில் ஓதப்பட்டது. ≈ஸத்யம் தத்தவயம்~ஸக்ருதுச் ச்ராவயதி∆ என்று ச்ருதி. ≈யோட்ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் யோவை வேதாம்ச்ச ப்ரஹிணோதி தஸ்மை தம்ஹிதேவமாத்மபுத்திப்ராஸாதம் முமுக்ஷுர்வை சரணமஹம் ப்ரபத்யே∆ என்று ச்வேதாச்வதர உபநிஷத், இங்கு பிரமனை முதலில் படைத்த அந்த தேவனை முமுக்ஷுவான நான் சரணம் பற்றுகிறேன் என்று வேத புருஷன் சொல்லுவதாக அமைந்துள்ளது. காரண புருஷனான தேவனைச் சரணம் பற்றுகிறேன் என்றதாயிற்று. காரண புருஷன் = நாராயணன்.

இனி த்வயத்தின் பொருளை விளக்கும் இரண்டாவது ச்லோகம்

ஈசாநாம் ஜகதாமதீசதயிதாம் நித்யாநபாயாம் ச்ரியம்

ஸம்ச்ரித்யாச்ரயணோசிதாகில குணஸ்யாங்க்ரீ ஹரேராச்ரயே |

இஷ்டோபாயதயா ச்ரியா ச ஸஹிதாய ஆத்மேச்வ ராயார்த்தயே

கர்த்தும் தாஸ்யமசேஷமப்ரதிஹதம் நித்யம் த்வஹம் நிர்மம: || 6

எல்லாவுலகங்களையும் நியமிக்கும் ஈச்வரியாகவும், ஸர்வேச்வரனான பகவானுக்கு இனியளான பத்நியாயும், எம்பெருமானைவிட்டு நொடிப் பொழுதும் பிரியாதவளுமான பெரியபிராட்டியாரை (ச்ரியம்-மஹாலக்ஷ்மியை), புருஷகாரமாகப் பற்றி (ஆச்ரயித்து), சேதனன் ஆச்ரயிப்பதற்குத் தக்கவையான வாத்ஸல்யம் முதலான ஸகலகல்யாண குணங்களையுடையவனான எம்பெருமானின் திருவடிகளை இஷ்டமானது (கைங்கர்யம்) ஸித்திக்கைக்கான உபாயதயா (உபாயமாக) ஆச்ரயிக்கிறேன்.

(எம்பெருமானுடைய திருவடிகளையே உபாயமாகவும் அடையத்தக்க உபேயமாகவும் உறுதியுடன் பற்றுகிறேன்). பெரிய பிராட்டியாரோடு எப்போதும் கூடியுள்ள அனைவர்க்கும் (ஸகலஜீவர்களுக்கும்) ஸ்வாமியுமான நாராயணனின் பொருட்டு அஹம்து-முமுக்ஷுவாய் ஸித்தோபாயத்தைப் பற்றியுள்ள அடியேன், அஹங்கார மமகாரமற்றவனாய், மீதமின்றி (எல்லாவற்றையும்) தடையேதுமின்றி நித்யமான (எப்போதும்) அடிமையான கைங்கர்யத்தை செய்யப்பெறுவேனாகவேணும் (வேண்டுகிறேன்).

ஈசாநாம்....ச்ரியம் :- அதீசதயிதா-ஸர்வேச்வரனின் பத்நி அதனால்இவ்வுலகுகளுக்கு ஈச்வரி. "அஸ்யேசாநா ஜகதோ விஷ்ணுபத்நீ" (நீளாஸூக்தம்) "ஹ்ரீச்ச தே லக்ஷ்மீச்ச பத்ந்யௌ" (தைத்ரீயம்) "ஈச்வரீம் ஸர்வபூதாநாம்" (ஸ்ரீஸூக்தம்) விஷ்ணுபத்நியாக அவனை ஆச்ரயிக்கிறாள் ; "த்வம் மாதா ஸர்வலோகாநாம் தேவதேவோ ஹரி : பிதா" (ஸ்ரீ விஷ்ணு புராணம்) ஸர்வலோகமாதாவானபடியால் எல்லாராலும் ஆச்ரயிக்கப்படுகிறாள். ஸ்ரீசப்தத்துக்கு இப்படி இரண்டர்த்தங்கள் முன்பே காட்டப்பட்டுள்ளன. நித்யாநபாயாம்-விஷ்ணோச்ரீரநபாயி-எப்போதும் எம்பெருமானை விட்டுப்பிரியாதவள். ச்ரியம் பெரிய பிராட்டியாரை. ஸ்ரீசப்தம் மஹாலக்ஷ்மிக்கு முதல், முக்கியமான திருநாம், ச்ரயதே-பகவானை ஆச்ரமயக்கிறாள்; ஸ்ரீயதே-சேதனர்களால் ஸேவிக்கப்படுகிறாள். இவை தவிர நமது விண்ணப்பங்களைக் கேட்கிறாள், நல்லுபதேசத்தைக் கேட்பிக்கிறாள் (உபதேசத்தால் விமுகரைத் திருத்தும்); ஆச்ரிததோஷங்களைப் போக்குகிறாள்; ஆச்ரித குணங்களைப் பெருக்குகிறாள் (வளர்க்கிறாள்) என்று ஸ்ரீ சப்தத்துக்கு ஆறு பொருள்கள்.

ஸம்ச்ரித்ய - இவளை ஆச்ரயித்து. ஆச்ரயிப்பது புருஷகாரமாக, ஈச்வரன்ஸ்வதந்த்ரனாகையாலே நம் குற்றங்களைக் கண்டு சீறி தண்டிக்கப் புகுவன். பிராட்டி அருகிலிருந்து அவனுடைய ஆச்ரயிப்பதற்குத்தக்க குணங்களை விளங்கச் செய்து சீற்றத்தை மறப்பிப்பாள், புருஷன்-பலப்ரதன், எம்பெருமானை தண்டிப்பவனாயல்லாமல் அருளுடையவனாய் வேண்டியபலனைத் தருபவனாயாக்குகை புருஷகாரக்ருத்யமாம். இவளை புருஷகாரமாகப் பற்றி, கல்யாண குணபூர்ணனான - ஆச்ரயணகுணோசிதாகில குணஸ்ய - சரணம் பற்றுகைக்குத்தக்கவை; சரண்யனை இவன் பயமில்லாமல் பற்றுகைக்கு அநுகூலமான (ஆச்ரயண ஸௌகர்யாபாதக, ஆச்ரிதகார்யாபாதக குணங்கள் என்பர்) வாத்ஸல்ய ஸ்வாமித்வ, ஸௌசீல்ய, ஸௌலப்ய, ஞானசக்திகள் இவை முன்னமே விளக்கப்பட்டவை, இப்படிப்பட்ட குணபூர்த்தியுடைய ஹரே: அங்க்ரீ - எம்பெருமானுடைய திருவடிகளை. ஸ்ரீ மந்நாராயண சரணௌ, இஷ்டோபாயதயா - இஷ்டம் நிறைவேறுவதற்கு உபாயமாய். இஷ்டம்-

பகவத்ப்ராப்தி, மிதுநகைங்கர்யம். இவைகளைப் பெறும் பொருட்டு உபாயமாய் ஸாதநமாய்க்கொண்டு, ஆச்ரயே-சரணம் ப்ரபத்யே-எம்பெருமானை சரணம் பற்றுகிறேன்.

ச்ரியா ச ஸஹிதாய ஆத்மேச்வராய-சரணம் பற்றுகையில் புருஷகாரபூதையான பிராட்டியுடன் சேர்ந்த ஸர்வேச்வரன் பொருட்டு ஆத்மாநாம் ஈச்வர; - ஸர்வசேஷியான நாராயணன் ஆத்மேச்வராய - நாராயணனான - ச்ரிய; பதியான எம்பெருமானிடம் அஹம்-ஸித்தோபயத்தைப்பற்றிய அடியேன்; து¯வைலக்ஷண்யம். இதர உபாயங்களை ஸவாஸனமாக விட்டு விட்டு எம்பெருமானையே உபாயமாகப்பற்றிய அடியேன். நிர்மம: அஹங்காரமமகாரமற்று; இது முன்பே விளக்கப்பட்டது-பலத்தினால் உகப்பவன் நானன்று பகவானே என்பது. அசேஷம் - ஒன்றுவிடாமல் எல்லாம்; அப்ரதி ஹதம்-தடையேதுமின்றி: நித்யம்-ஸர்வதேச, ஸர்வகால, ஸர்வாவஸ்தோசிதம். தாஸ்யம்-அடிமை; கைங்கர்யம் கர்தும் அர்த்தயே-"எல்லா விடங்களிலும், எல்லாக்காலங்களிலும், எல்லா நிலைகளிலும் இடைவீடின்றி பெருமாளும் பிராட்டியுமான சேர்த்திக்கு கைங்கர்யம் பண்ணப் பெறுவேனாகவேண்டும்" என்று வேண்டுகிறேன். நிர்மம:- மற்றை நங்காமங்கள் மாற்று.

பூர்வகண்டத்தால் பிராட்டியைப் புருஷகாரமாகக் கொண்டு எம்பெருமானுடைய திருவடிகளை (எம்பெருமானை) உபாயமாகப் பற்றி சரணம் புகுந்து, உத்தரகண்டத்தால் பிராட்டியும் எம்பெருமானுமான என்றும் பிரியாத சேர்த்திக்கு எல்லாவிதமான கைங்கர்யங்களையும் அவர்களுக்காகவே இடைவீடின்றி செய்வேனாகவேண்டும் என்று ப்ரார்த்திக்கிறது. முதல்பாதி சரணவரணம், பின்பாதி கைங்கர்யப்ரார்த்தனை.

த்வயத்தை அநுஸந்திப்பதால் ப்ரபத்யநுஷ்டானம் பிறக்கிறது. இது ஸித்தோபாய வரணம். மந்த்ரரத்நத்தைத் திரும்பத் திரும்பச் சொல்வது அதன் இனிமையாலே. சரணாகதி பண்ணுவது ஸ்க்ருத்-ஒரே ஒரு முறை தான். சரணாகதன் விழாமல் ஜாக்ரதையாக இருக்கவேண்டிய படுகுழிகள் - இதர மோக்ஷ ஸாதனமாக உபாயங்களில் கண் வைக்கை ; தேவதாந்தர ஸம்பந்தம், பாபபுத்தி (அதர்மம்-சூது, களவு, பொய்) இவைகளில் விழாமல் விழித்துக்கொண்டு இருக்கவேணும். இந்தபாபங்களில் நம்மையறியாமல் விழாமல் காப்பது த்வயாநுஸந்தானம், த்வயார்த்தாநு ஸந்தானம். நம்மையறியாமல் பாபம் செய்ய நேர்ந்தால் நாம் பண்ணிய சரணாகதியை (த்வயத்தின் அர்த்தத்தை) மனதில் நினைத்து ஈச்வரனை வேண்டினால் அவன் அருள் கூர்ந்து மன்னிப்பான். இத்துடன் திருமந்த்ரத்தின் விவரணமான த்வயத்தின் விளக்கம் முற்றும். மேலே சரமச்லோகார்த்தம் விளக்கப்படும்.

# அஷ்டச்லோகீ - 7

## சரமச்லோக விவரணம் I.

இனி ஸ்ரீபராசரபட்டர் தமது அஷ்டச்லோகீயில் காட்டியருளியுள்ளபடி மாயனன்றைவர் தெய்வத்தேரினில் செப்பிய கீதையின் செம்மைப் பொருளான சரமச் லோகத்தினர்த்தத்தை அநுபவிப்போம். இந்த சரமச்லோகம் த்வயத்தின் விவரணம்; சரண்யருசி பரிக்குஹீதம் (சரண்யனான எம்பெருமானுடைய மனதுக்கொத்தது) என்பர் நமதாசாரியர்கள். எம்பெருமானை யடைந்து, அவனது ஸ்வரூப ரூப குணவிபூதிகளை யநுபவித்து, அதனாலுண்டான ப்ரீதியால் தூண்டப்பட்டு அவ்வெம்பெருமானுக்கு கைங்கர்ய பண்ணுவதே மேலான ச்ரேயஸ்ஸாகக் கொள்ளப்பட்டுள்ளது. இந்த ச்ரேயஸ்ஸைப் பெற இதைவிட வேறு மேலான வழியில்லை; இதற்கு அவ்வருகில்லை யென்பதால் (சரம) இறுதியான இந்த உபாயத்தை வெளியிடும் ச்லோகம் **சரமச்லோகம்** எனப்படுகின்றது. இதை "வார்த்தை" என்றும் "மெய்மைப் பெருவார்த்தை" என்றும் நம்மாழ்வாரும் கோதைநாச்சியாரும் கொண்டாடியுள்ளனர். அஷ்டச்லோகீ 7வது சுலோகத்தின் கண்ணனருளிய கீதா சரமச்லோகத்தின்(18 66) அர்த்தத்தை ஸாரமாகவருளிச் செய்கிறார்.

இந்த 7வது ச்லோகத்தின் நடை முன் சுலோகங்களினின்றும் வேறுபட்டதாகவுள்ளது. பகவத் வாக்யத்துக்கு வியாக்யானத்தை பகவத் வாக்யமாகவே அமைத்து பட்டர் பேசுகிறார். கண்ணனெம்பெருமானின் பேச்சாகவே அமைந்துள்ளது. சாஸ்த்ரங்கள் பல தர்மங்களைச் சொன்ன போதிலும் அவற்றுக்கு ஒரு தர்மத்திலேதான் முக்கிய நோக்காயிருக்கும். வைதிகர்களும் பல அர்த்தங்களைச் சொன்னாலும் ஒன்றிலே முக்கிய நோக்காயிருப்பார்கள். பகவானும் இப்படியே, **மாம் சரணம்; வ்ரஜ மாம் ஏகம் சரணம் வ்ரஜ** என்று பகவான் நம்மை நியமிக்கிறான் - விதிக்கிறான் - கட்டளையிடுகிறான். இப்படி சரணம் பற்றுவது **ப்ரபத்தி** என்றும் **சரணாகதி** என்றும் அழைக்கப்படுகிறது.

**சரணாகதி என்றால் என்ன?** - ≈அஹமஸ்மி அபராதாநாம் ஆலய: அகிஞ்சந : அநந்யகதி: த்வமேவ உபாயபூதோமே பவ இதிப் ப்ரார்த்தநாமதி: சரணாகதி:∆- என்று ஸ்ரீபாஞ்ச ராத்ரத்தில் சரணாகதி விளக்கப்படுகிறது. எம்பெருமானைக் கிட்டி "நான் எல்லாவிதமான அபராதங்களுக்கும் கொள்கலம், நன்மை என்ற கைம்முதலற்றவன். உன்னை விட்டுவேறு புகலில்லை, எனது பேற்றுக்கு நீயே உபாயமாயிருந்து என்னை உய்விக்கவேணும்" என்று நெஞ்சினால் நினைத்து வேண்டுவது. இது வேதத்தாலும் வைதிகர்களாலும் ஆதரிக்கப்பட்ட மார்க்கமாகும்.

"தம்ஹ தேவம் ஆத்மபுத்திப்ரஸாதம் முமுக்ஷுர்வை சரணம் ஹம்ப்ரபத்யே" என்பது நமக்கு அறிமுகமான வேதமந்த்ரம். ≈மோக்ஷத்தில் அசையுடைய நான் (முமுக்ஷு) காரணதுவஸ்துவான பரமபுருஷனை சரணம் பற்றுகிறேன்∆ என்றபடி. இது வேத புருஷன் ஆசரித்துக் காட்டியபடி. வைதிகச்ரேஷ்டரான நம்மாழ்வார் *அகிலகில்லேன்....... (திருவாய்-6-10-10) பாசுரத்தில். "திருவேங்கடத்தானே புகலொன்றில்லா வடியேன் உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே" என்று அர்ச்சாவதார எம்பெருமானிடம் இதை சொல்லிக்காட்டினார். பரமாசாரியான ஆளவந்தார் ≈நதர்ம நிஷ்டோஸ்மி......த்வத்பாத மூலம் சரணம் ப்ரபத்யே∆ என்று அநுஷ்டித்துக்காட்டினார் (ஸ்தோத்ரரத்நம்) 'வேதைச்சஸர்வைரஹமேவ வேத்ய: எல்லாவேதங்களாலும் அறியப்படும் பரமபுருஷன் நானே' என்று சொல்லிக்கொண்ட கண்ணனை ஸர்வவேதப்ரதிபாத்யனை - "என்னையே சரணம்பற்று" என்று விதிப்பதால் இது அவன் உகந்த அர்த்தம் என்பது தெளிவு. ஜகதுத்தாரக ஆசார்யரான எம்பெருமானாரும் "ஸர்வதர்மாம்ஸ்ச ஸந்த்யஜ்ய..... லேகவிக்ராந்த சரணௌ சரணம் தேவ்ரஜம்விபோ" என்று கத்யத்தில் அநுஷ்டித்துக் காட்டினார். இங்கு "எல்லா தர்மங்களையும் வாஸனையோடே தொலைத்து விட்டு உலகமளந்த உனது பொன்னடிகளையே பற்றினேன்" என்பது ஸாரமான அர்த்தம். இதுதான் சரமச்லோகத்தில் கண்ணனால் விதிக்கப்பட்ட சரணாகதியாம்.

**ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ |**

**அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாசுச : ||**

என்பது கீதையில் கண்ணனருளிய சரமச்லோகம். (18-66)'மோக்ஷோபாயமாக முன்பு சொன்ன தர்மங்களையெல்லாம் விட்டுவிட்டு என்னையே உபாயமாகப்பற்று. அப்படி பற்றிய உன்னை என்னைக்கிட்ட வொட்டாமல் தடுக்கும் எல்லாபாபங்களினின்றும் விடுவித்து உய்விக்கிறேன். வருந்தாதே" என்பது இதன் பொருள். அஷ்டச்லோகீயில் இதன் விவரணம்:

**மத்ப்ராப்யர்த்ததயா மயோக்தமகிலம் ஸந்த்யஜ்யதர்மம்புந :**

**மாமேகம் மதவாப்தயே சரணமித்யார்தோவஸாயம் குரு |**

**த்வாமேவம் வ்யவஸாயயுக்தம் அகிலஜ்ஞாநாதி பூர்ணோஹ்யஹம்**

**மத்ப்ராப்தி ப்ரதிபந்தகைர்விரஹிதம் குர்யாம் சுசம் மாக்ருதா: || 7**

என்னையடைவதாகிற ப்ரயோஜநத்தைப் (பேற்றை-பலனை) பெறுவதற்காக, (உனக்கு நல்லதைச் சொல்லும்) என்னால் (இதற்கு முன்பு) சொல்லப்பட்ட எல்லா தர்மங்களையும் (உபாயங்களையும் மீண்டும் பற்றாவிடாதபடி) நன்றாக விட்டுவிட்டு, மேலும் என்னை ஒருவனையே குறித்து என்னைப் பெறுவதாகிற மோக்ஷபலத்தை யுத்தேசித்து, (இதர

ஸதாநங்கள் ஸ்வரூபத்துக்குச் சேராதவை) என்று வருந்திய நீ, என்னையே உபாயமென்று நிச்சயத்தை (உறுதியை) கொள்வாயாக. இப்படி நிச்சயித்ததான (உறுதியான) எண்ணங்கொண்ட உன்னை, பூர்ணமான ஜ்ஞானம் முதலான குணங்களினால் நிறைந்தவனான நான், நீ என்னை அடைவதற்குத் தடையாக நிற்கும் எல்லா பாபங்களிலிருந்தும் (புண்யம், பாபம் இரண்டுமே தடைகளாம்) விடுதலையடைந்தவனாகச் (பாபமற்றவனாக) செய்கிறேன். வருத்தத்தைப் பண்ணாதே. (வருத்தமடையாதே).

என்னால் பகவானான என்னையடைதற்பொருட்டு உனது ச்ரேயஸ்ஸைக்குறித்து ("எது எனக்கு ச்ரேயஸ்ஸைத் தருமோ அதை நிச்சயித்து எனக்குச் சொல்லுவாய்" என்று நீ கேட்டதற்கு உன் நலனை உத்தேசித்து) நான் முன்பு சொன்ன கர்ம, ஜ்ஞான பக்திகளாகிற உபாயங்களில் புத்தியை நன்றாக (ஸவாஸநமாக) விட்டுவிட்டு என்னையடைய என்னையே உபாயமாக ஆர்த்தியுடன் அறுதியிட்டுக்கொள். மாமேகம்-என்னையே; **சரணமிதி** - உபாயமாக, **அவஸாயம் குரு** - அறுதியிடு.

**ஆர்த்த: அவஸாயம் குரு** - ஆர்த்தியாவது துன்பம் ; ஆர்த்த:- துன்பமுடையவன். ஸ்ரீராமாநுஜர் இப்பபொருளைப் பெறுவதற்குத் திருக்கோட்டியூர் நம்பியிடம் 18 தடவை நடந்தார் என்பதால் இவ்வர்த்தம் ச்ரமப்பட்டே பெறவேண்டும் என்பது தெரிகிறது. எம்பெருமானையடைய நூல்களில் பல மார்க்கங்கள் காட்டப்பட்டுள்ளன. இவற்றுள் சாஸ்த்ர முறைப்படி பண்ணும் பக்தியோகம் மிகவும் முக்யமானது. சாஸ்த்ரங்களில் பக்தி 32 விதமான உபாஸனங்களாகச் சொல்லப்பட்டுள்ளது. இவற்றுள் ஏதாவதொன்றில் ஸம்பந்தமிருந்தால் மோக்ஷமுண்டு என்று - "**மந்மநாபவ, மத்பக்த மத்யாஜீ மாம் நமஸ்குரு**" - என்று விதித்தான். "என்னிடம் பக்தியுள்ளவனாய் என்னைச் சிந்திப்பாயாக" என்றான். இப்போது அத்தை விட்டுவிட்டுத் தன்னையே தஞ்சமாகப்பற்று (மாம்ப்ரபத்யஸ்வ) என்று நியமிக்கிறான். முன்புதான் விதித்த பக்தியைத் தானே வேண்டாமென்று சொல்லலாமா? பக்தியும் சாஸ்த்ரவிதிதமான உபாயம் தானே. இப்போது அதை விலக்கி ப்ரபத்தியை விதிப்பானேன்?

பக்தியை உபாயமாக விதித்தது எந்த அதிகாரிக்கு? சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட பக்தி கடினமானது; திடமான சரீரம் வேணும் இந்த்ரியஜயம் வேணும்; நியமத்துடன் பகவானை இடைவிடாமல் தொடர்ந்து சிந்திக்கவேணும். சிறந்த ஜ்ஞானசக்திகள் உடையவனுக்கே முடியும். இவற்றுக்கெல்லாம் மேலே வேதத்தில் அதிகாரமுடையவனே பக்தியை உபாயமாகக் கொள்ளலாம். இதில் அதிகாரியானவன் ஞான சக்திகளுடையவனானால் இதையே உபாயமாகக் கொள்ளவேணும் என்று ஒருபக்ஷம். இப்படி ஒரு நிர்வாஹத்தை வேதாந்த தேசிகர் தமது

ரஹஸ்யக்ரந்தங்களில் காட்டியுள்ளார். "ஜ்ஞானசக்திகள் இல்லாமையால் பக்திபண்ண முடியாமலிருந்தாயாகில் ப்ரபத்திபண்ணு" என்று கண்ணன் சொல்வதாக இந்த பக்ஷம். இதை 'அநுவாத பக்ஷம்' என்பர். உண்ணக்கூடாதவற்றை (அறியாமையால்) உண்டாயாகில் "சாந்த்ராயநம்" என்ற வ்ரதத்தை அநுஷ்டிக்கவேண்டும்-இது சாஸ்த்ரவிதி. இது உண்ணக்கூடாததை உண்டு பின் சாந்த்ராயந வ்ரதத்தை அனுஷ்டி என்று சொல்லவில்லை. "அறியாமையால் புஜித்திருந்தாயாகில்" வ்ரதமிருந்து அப்பாபத்தைத் தொலைத்துக் கொள். இது சாஸ்த்ரம். "ஞான சக்தியில்லாமலிருந்ததேயாகில் ப்ரபத்தியைக் கைக் கொள்" - என்ற இது அநுவாதபக்ஷம்.

**வாத்ஸல்ய மாமேகம்...** அவஸாயம் குரு-விட்டுவிட்டு என்னையே உபாயமாகப்பற்று. "என்னைப் பேற்றுக்கு உபாயமாகப்பற்று" என்பது கட்டளை. அப்படி செய்யும் போது மற்ற உபாயங்களை விட்டுவிட்டே பற்றவேணும். இது விதிபக்ஷம். ஸ்நாநம் பண்ணி உணவருந்து; "ஸ்நாத்வா புஞ்ஜீத" என்பது சாஸ்த்ரக்கட்டளை. இங்கு கட்டளையில் உயிர், உணவருந்தும் போது குளித்து விட்டே அருந்தவேணும் என்பதே. முதலில் ஸ்நாநம் பின்னர் போஜனம். இதுபோல மற்றதர்மங்களை விட்டு விட்டே (விட்டபிறகே) பகவானை உபயமாகப் பற்றவேணும். ஞானசக்திகள் இருந்தாலும் இல்லாவிட்டாலும் ப்ரபத்தியே வழி. ஞான சக்திகளில்லாதவனை பற்றி விசாரமில்லை. இவையுள்ளவனுக்கு பக்தியே உபாயமென்று தேசிகபக்ஷம். இவையிருந்தாலும் இவற்றைக்கொண்டு அநுஷ்டிக்கக்கூடிய பக்தியில் கண்வையாமல் அதை (ஸ்வரூபவித்தமென்று விட்டுவிடவேணும். விட்டுவிட்டு பகவானையே உபாயமாகப் பற்றவேணும். இது லோகதேசிகபக்ஷம். சக்தியுள்ளவனும் விட்டேயாக வேணுமென்றால் பக்தி யாருக்கு விதிக்கப்பட்டது?

ஸ்ரீபாஷ்யகாரர் (எம்பெருமானார்) காலத்தில் வாழ்ந்திருந்த [illegible]கண்டார் என்ற பெயரையுள்ள வித்வானொருவர் தமக்கு பாஷ்யகாரர் ப்ரபத்தியைப் பற்றி விளக்கமாக அருளிச்செய்யக் கேட்டு "வழி அழகாக உள்ளது ஆனால் எனக்கு ருசிக்கவில்லை" என்றாராம். இதற்கு ஸ்வாமி "வித்வானாகையாலே அர்த்தத்துக்கு இசைந்தாய். [illegible]யாலே இழக்கிறாய்" என்று பதில் அருளியதாக சரித்திரம். "நமக்கு ஞானசக்திகள்" உள்ளன. பக்தியைச் செய்து தலைக்காட்ட ஸாமர்த்தியம் உள்ளது. இதுவே நமக்குத் தக்க உபாயம் என்றிருப்பவனுக்கு பக்தி கொள்ளத் தக்க உபாயமாம்.

ஸ்வஸ்வரூபத்தை-ஆத்மாவின் உண்மையான இயல்பை-உள்ளபடி உணர்ந்தவனுக்கு பக்தியைச் செய்ய இடமில்லை. ஆத்மாவின் நிஷ்க்ருஷ்ட

ஸ்வரூபம் பாரதந்த்ர்யம். பக்தியோ தன்முயற்சியினால் செய்து தலைக்கட்ட வேண்டிய-ஸ்வாதந்த்ர்யம் மிக்க உபாயமாம். இது ஆத்மஸ்வரூபமான பாரதந்த்ர்யத்துக்குச் சேராதது. பகவச் சரணவரணமே ஆத்ம யாதாத்ம்யஜ்ஞானம் (ஆத்மாவைப் பற்றிய உண்மையறிவு) படைத்தவனுக்குத் தக்க உபாயம். ஞானபூர்த்தியில்லாத-யதோசித ஞானமான-சாஸ்த்ரஜ்ஞானம்-மட்டுமேயுள்ளவனுக்கு பக்தியில் அந்வயம். சாஸ்த்ர ஸாரதமமான யாதாத்ம்யஜ்ஞான முள்ளவன் பக்தியில் கண் வைக்கமாட்டான். இங்கு சொல்வது உபாயமாக அநுஷ்டிக்கப்படும் பக்தியை. "மற்றதர்மங்களில் (கர்ம ஜ்ஞாந பக்திகளில்) ப்ரவ்ருத்தி (தொடர்பு, முயற்சி) உன் ஸ்வரூபத்துக்குச்சேராதவை; அவை உனக்கு வேண்டாம். அவற்றை அறவே விட்டொழித்து என்னையே உபாயமாகப்பற்று" என்று பகவான் விதிக்கிறான்- இது லோகாசார்யபக்ஷம்.

ஞானசக்திகளில்லாதவன் "என்னால் பக்தியை அநுஷ்டித்துத் தலைக்கட்ட இயலாதே-நான் பேற்றையிழக்க வேண்டியவன்தானா?" என்று துன்புற்று (ஆர்த்தனாய்) பகவானைச் சரணம் புகுந்து உய்யலாம். இதுதான் அநுவாதபக்ஷஸாரம் "ப்ரபத்தி ஒன்றே பாரதந்த்ர்யமான ஜீவஸ்வரூபத்துக்குச் சேர்ந்தது. சக்தியிருந்தாலும் மற்ற தர்மங்கள் ஸ்வப்ரவ்ருத்தி வேண்டியவை யாதலால் ஸ்வரூபவிருத்தங்கள். இவை ஸ்வரூபத்துக்குச் சேரவில்லையே என்ற ஆர்த்தியுடன் அவற்றை விட்டொழித்து பகவானைச் சரணம் பற்றவேணும். இது விதிபக்ஷஸாரம்.

ப்ரபத்திக்கு அதிகாரிகள் மூவகை என ரஹஸ்யக்ரந்தங்களில் நமதாசாரியர்கள் காட்டியுள்ளனர். நிரபேக்ஷரக்ஷை, நிரபேக்ஷ சிந்தாமணி முதலான ரஹஸ்யநூல்களில் வேதாந்தாசரியரும் இசைந்த அர்த்தமிது. (1) அத்யந்த பக்தியால்-ப்ரேமத்தால் (இது ஸ்வரூபத்துக்குச் சேர்ந்தபக்தி- எம்பெருமானுடைய ஸ்வரூப குணாநுபவமடியாக இயல்பாக ஏற்படுவது) ப்ரபந்நர்கள் ஆழ்வார்கள். அதிமாத்ரப்ரேமையுடையவர்க்கு 'இட்டகாலிட்ட கைகளாய், *காலாழும் நெஞ்சழியும் என்று சரீரம், இந்த்ரியங்கள், மனம் எல்லாம் "என்னெஞ்சினாரும் அங்கே யொழிந்தார்" என்கிறபடி இவர்கள் வசமல்லாமையால் முறைப்படி பக்தியை அநுஷ்டிக்க முடியாது. இவர்கள் அவனையே கால்கட்டி அவனையே எல்லாவற்றுக்கும் எதிர்நோக்கியிருப்பவர் (2) ஞானதிகர்களான நமது பூர்வாசாரியர்கள் ஞானசக்திகளில் நிறைந்தவர்களேயாகிலும் ஆழ்வார் காட்டியவழியே சிறந்தது. ஸ்வரூபத்துக்கு ஏற்றது என்று ப்ரபந்நர்களாய் விளங்கினர் ஜ்ஞாநாதிக்யமாவது-பரமபுருஷனையடைய அவனே உபாயம்; ஜீவன் அநந்யசரணன்; கொண்டானையறியாக் குலமகள் போல அவனையே பற்றுதலின்றி வேறு உபாயமநுஷ்டிக்கத் தகாதவன். இதரவுபாயங்களைய நுஷ்டிக்க இவர்களின் ஸ்வரூபயாதத்ம்யஜ்ஞாந பூர்த்தி இடம்தராது. நமது

ஸித்தாந்தத்தின் ப்ரதாநபரிதந்த்ரார்த்தமான சரீராத்ம பாவத்துக்குச் சேர (நமது எம்பெருமானார் தரிசனத்தில் மிகமுக்யமான அர்த்தமான "ப்ரமாத்மா உயிர்; ஜீவர்களும் அசித்தும் அவனுடல்" என்றதைப் பார்த்தால்) அவனிட்ட வழக்காயிருப்பதே தக்கது. அத்யந்த பாரதந்த்ர்யமே ஜீவாத்மாவின் வடிக்கட்டின ஸ்வரூபமாகையால் மற்ற உபாயங்கள் இப்பாரதந்த்ர்யத்துக்குச் சேராதவையென்று விடத்தக்கவை. "த்வத்பாரதந்த்ர் யோசிதா" என்று தேசிகன் நிரபேக்ஷரக்ஷையில் காட்டிய அர்த்தமிது. **ஸ்ரீரங்கேச்வர! யாவதாத்ம நியத த்வத் பாரதந்த்ர்யோசிதா** த்வய்யேவ த்வதுபாயதீ: அபிஹித ஸ்வோபாய பாவாஸ்துமே –"திருவரங்கநாதனே! ஆத்மாவின் நித்யமான பாரதந்த்ர்யத்துக்குச்சேர நீயே அடியேனுக்கு உபாயமாக அமைய வேணும்" என்ற ப்ராத்தனை இங்கு ஸாரமான பொருள். இதனால் ப்ரபத்தியே ஆத்மஸ்வரூபமான பாரதந்த்ர்யத்துக்கு இசைந்தது என்று வலியுறுத்தப்பட்டது. லோகதேசிகன் ஒருபடி மேலே சென்று உபாயபக்தி அபாயம் என்றார். சொல்லும் விதத்தில் சிறிது வ்யத்யாஸமுள்ளதேயன்றி அர்த்தத்தில் வேதாந்தாசாரியருக்கும் லோகாசாரியருக்கும் அபிப்ராயபேதமில்லை. (3) அஜ்ஞானத்தாலே ப்ரபந்நர்கள் அஸ்மதாதிகள். அதாவது ஜ்ஞானசக்திகளில் மிகவும் குறைந்தவர்கள். அஜ்ஞர்கள் என்றே சொல்லும்படியிருப்பவர்கள் ஸம்ஸாரிகளான நாம். நமக்கு ப்ரபத்தியையொழிய வேறு உபாயமில்லை.

மத்ப்ராப்த்யர்த்தத யா - என்னையடைவதற்கு ஸாதனமாக) மயோக்தமகிலம் - இதற்கு முன்பு என்னால் சொல்லப்பட்ட தர்மங்களனைத்தையும். ஸந்த்யஜ்ய - ஸவாஸநமாக நன்றாக விட்டுவிட்டு. கர்மஜ்ஞானபக்திகளில் உபாயபுத்தி கூடாது என்பதே முக்கியமான பொருள். "சாஸ்த்ரவிஹிதகர்மங்களைவிட்டுவிடு" என்று கூறியதாக ஆகாது. சாஸ்த்ர விஹிதமான கர்மங்களை "பகவதாரதனரூபம் இவை ; அவனுக்கு செய்யும் கைங்கர்யம்" என்ற புத்தியுடன் செய்வதே லோகக்ஷேமமாகும். ஜ்ஞானபூர்த்தியுள்ள ப்ரபந்நன் கர்மத்தை விட்டுவிட்டால் அவனைப் பார்த்து உலகத்தவரும் விட்டு கேட்டையடைவார்களாதலாலும் ப்ரபந்நன் கர்மத்தை பகவத்கைங்கர்யரூபமாகச் செய்தாக வேண்டும். "கர்மம் கைங்கர்யத்திலே புகும்" (மு.மு.282) என்று லோகசார்ய ஸ்ரீஸூக்தி. இதுவரை 'ஸர்வதர்மாந் பரித்யஜ்ய" (கீதா சரமச்லோகம்) என்பதன் விளக்கம்.

புநர்மாமேகம் - மேலும் என்னையே-'ஏகம்' என்பது 'ஏவ' என்ற அவதாரணார்த்தம். 'என்னொருவனையே' என்றபடியாம். கிட்டுவதற்கு ஸுலபமான வாத்ஸல்யாதி குணபூர்ணனான என்னை. மாமேகம்ப்ரதி - என்று கொள்ள வேணும். என்னை உத்தேசித்து; ஆர்த்த:- ஸாதநாந்தரங்கள்) ப்ரபத்தியை யொழிந்த ஸாதனங்கள்; மற்ற உபாயங்கள்)

ஸ்வரூபவித்தம்; அநுஷ்டித்துத் தலைக்கட்ட முடியாதவை - துஷ்கரம் என்று மனதில் துன்பமடைந்து;மதவாப்தயே- என்னைப் பெறுதற்பொருட்டு - என்னையடையும் பொருட்டு. **சரணமிதி** - நானே உபாயம் என்று. **அவஸாயம்குரு** - அத்யவஸாயத்தை - உறுதியை - செய்துகொள். இப்படி; **மாமேகம் சரணம் வ்ரஜ** என்பதன் பொருளை விளக்கியருளுகிறார். இதுவரை கீதாசரமச்லோகத்தின் முன்பாதியின் பொருள் (அதிகாரிக்ருத்யம்) விளக்கப்பட்டது.

இனி சரண்யன் (பற்றப்பட்ட பகவான்) தனது அத்யவஸாயத்தை (உறுதியை) சொல்லிக்காட்டுகிறான். **ஏவம்** - இப்படி; **வ்யவஸாயயுக்தம்** - உறுதிப்பாட்டையுடையனான; **த்வாம்**-அஜ்ஞனானயும் அதசக்தனாயும் தகுதியற்றவனாயுமுள்ள உன்னை. **அகிலஞாநாதி பூர்ண:அஹம்** - ஆச்ரிதனுக்கு (பற்றியவனுக்கு) கார்யம் செய்து தலைக்கட்டுவதற்குவேண்டிய ஜ்ஞானம், சக்தி, தகுதி முதலானவற்றில் நிறைந்தவனாய் வேதங்களில் ப்ரஸித்தனான நான். இவை **அஹம் த்வா** (சரமச்லோகம்) என்பவற்றினர்த்தங்கள்.

**«மத்ப்ராப்திப்ரதிபந்தகை»** :- என்னுடைய வொட்டாமல் தடுக்கும் பாபங்களினின்றும்; **விரஹிதம் குர்யாம்**-விடுபட்டவனாக்குவேன். (ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி) ; **சுசம்மாக்ருதா**:- வருந்த வேண்டாம் **(மாசுச:)** ப்ராப்திப்ரதிபந்தகமானவை - தடைகள் இவை பாபமாயுமிருக்கலாம், புண்யமாயுமிருக்கலாம். இரண்டு பகவத்ப்ராப்திக்குத்தடைகளே. அவித்யா ('அறிவின்மை'-அஜ்ஞானம்), கர்மவாஸனை, தேஹாத்மாபிமானம், அஹங்காரமமகாரங்கள் இவைகளால் ஏற்படும் புண்ய பாபங்கள். முமுக்ஷுவுக்குப் புண்யமும் தடையே. "ததா வித்வாந் புண்யபாபே விதூய நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி" (முண்டகோபநிஷத்) முக்தாத்மா புண்யாபங்களினின்றும் விடுபட்டு பகவத்ஸாம்யாபத்தி (மோக்ஷம்) அடைகிறான் என்று ச்ருதி. இன்னும் இதுபோல பல வேதாந்தவாக்யங்களுண்டு. சேர்த்துவைக்கப்பட்டு அநுபவித்தே கழியவேண்டிய ஸஞ்சித பாபங்கள்; பலன் கொடுக்க முற்பட்டுள்ள ப்ராரப்தமான கர்மாக்கள் (வினைப்பயன்); இனி கலங்கிச் செய்யக் கூடியவைகள் *போயபிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும் (திருப்பாவை). பகவத்ப்ராப்தி ப்ரதிபந்தகமான (அவனையடைய வொட்டாமல் தடுப்பவை) தடைகள்-பாபங்கள் யாவும் நீங்கினால் பகவத்ப்ராப்தியும் பகவத்கைங்கர்யமும் மோக்ஷாநந்தமும் நிச்சயம் என்று சொல்லத்தேவையில்லை.

**மாம்** என்று ஸாரதியாய்-அர்ஜுனனுக்குக் கையாளாயுள்ள ஸௌலப்யத்தையருளிச் செய்து, தனது பரத்வத்தை **அஹம்** என்று

காட்டித்தருகிறான். கண்ணன் ஸாரதியாய் உள்ளமையால் குறைவாளனன்று. ஆச்ரிதஸுலபன், என்பதையே காட்டும். தனதிச்சையால் தானே தன்னைத் தாழவிட்டுக் கொண்டபடி. "பலபிறவிகளில் அநுபவித்துக்கழிக்க வேண்டிய பாபங்களை ஒரு நொடிப்பெழுதில் கழித்துத்தந்து உன்னை உஜ்ஜீவிக்கப்பண்ணுகிறேன்" என்னும் இந்த 'அஹம்' அவனது பெருமேன்மையைக் காட்டுவதாம். இந்த பரத்வமே எம்பெருமானின் உண்மை நிலை. சோகநிமித்தம், அதைப்போக்கும் ப்ராகாரம், மேலே பலம் ஸித்தமென்று நம்பிக்கையுடன் விசாரமற்றிருக்கை, எல்லாம் கடைசி (வேது) ச்லோகத்தில் பேசப்படுகின்றன.



ஸ்ரீ அண்ணன் பெருமாள் திருக்கல்யாணம்

# அஷ்டச்லோகீ - 8

## சரமச்லோக விவரணம் 2

ச்ரியபதியான ஸர்வேச்வரன் ஸர்வஸ்வாமி. அவனைத் தவிர்த்த மற்றெல்லாம் - சேதனர், அசேதனம் - எல்லாம் அவனுடைய ஸொத்து. "ஈசவரஸ்ஸர்வபூதாநாம்" (கீதை 18-6) என்றும் "பூமிராபோநலோ வாயு: கம் மநோ புத்திரேவச.. ஜீவபூதாம் மஹாபாஹோ யயேதம் தார்யதே ஜகத்" (கீதை 7-4, 5) (நிலம்., நீர் முதலான படைப்புக்கு வேண்டிய 8 பொருள்கள் - அசேதனங்கள் எனது ஸொத்து; இதற்கும் மேலான அறிவுள்ள ஜீவ ஸமூகம் என் ஸொத்து - என்று அவனே சொல்லிக் கொள்கிறான். தனது ஸொத்தான ஜீவாத்மாக்களை தோஷம் விலக்கி சுத்தப்படுத்தி விநியோகம் கொள்ள பல கிருஷிகளை (முயற்சி-காரியம்) பகவான் மேற்கொள்கிறான். தானே ஆசார்யனும் சிஷ்யனுமாய் நின்று பத்ரிகாச்ரமத்தில் திருமந்த்ரத்தை வெளியிட்டருளினான். விஷ்ணுலோகத்தில் பெரியபிராட்டியாருக்கு த்வயத்தை உபதேசித்தான். குருக்ஷேத்ரத்தில் திருத்தேர்த்தட்டிலிருந்து அர்ஜுனனுக்கு சரமச்லோகத்தை வெளியிட்டான். இந்த உபதேசங்கள் உலகத்தவருக்கு உடனே பயன்படவில்லை. திருவங்கத்தில் பெரியபெருமாளாக ஸ்ரீரங்கநாச்சியாரான பெரியபிராட்டியாருக்கு ரஹஸ்யத்ரயத்தையும் உபதேசிக்க, பிராட்டி, சேனை முதலியார், நம்மாழ்வார், நாதமுனிகள் என்ற பரம்பரை வழியாக இவை நமக்குக் கிடைத்துள்ளன. இந்தமந்த்ரங்களின் அர்த்தங்களை நாமறிந்து கொள்ளும்படி கூரத்தாழ்வான் முதலில் வியாக்யானமாக அருளிச்செய்ததாகச் சொல்லப்படும் க்ரந்தம் இப்போது கிடைக்கவில்லை.

ரஹஸ்யத்ரய வ்யாக்யானமாக நமக்குக் கிடைக்கும் முதல் நூல் ஸ்ரீபராசரபட்டர் அருளிய அஷ்டச்லோகீ தான். பட்டர் விலக்ஷணமான மேதை. பலருக்கும் தோற்றாத அர்த்தங்கள் இவருக்குத் தோற்றுவதைக் காணலாம். அஷ்டச்லோகீயில் மந்த்ரங்களில் எத்தையும் வரியடைவே வ்யாக்யானிக்க வில்லை. ஆனால் அர்த்தங்கள் அழகாக உபாதிக்கப் படுகின்றன. ஆயினும் சரமச்லோகார்த்தம் வ்யக்தமாகவே அருளிச் செய்யப் படுகின்றது. சரமச்லோகத்தை விளக்கும் இரண்டு (7,8) ச்லோகங்களில் முதலது பக்வத்வசனமாகவும் மற்றது சேதனவசநமாகவும் அருளிச்செய்யப் பட்டுள்ளது. இந்த கடைசி (8வது) சுலோகம் "என்னையும் என் நிலையையும் பார்த்தால் நான் மிகவும் துக்கப்பட வேண்டியவனே. உன்னையும் (கண்ணனை) உன் வார்த்தையையும் பார்த்தால் நான் துக்கப்படத் தேவையில்லை. நிம்மதியாய் இருக்கலாம்" என்று ஜீவன் பரமாத்மாவிடம் சொல்லுவதாக அமைந்துள்ளது.

அர்ஜுனன் "ஸ்திதோஸ்மி கதஸந்தேஹ: கரிஷ்யே வசநம் தவ", (கீதை 18-73) என்று க்ருஷ்ணனுக்கு "மாசுச:": சொன்னதை நினைவூட்டுகிறது.

ஒருவனுக்கு ஞானசக்திகள் பூர்ணமாக விருந்தாலும் கண்ணனருளின்றி ஒரு காரியமுமாகாது. எவ்வித யோக்யதையுமில்லாத ஒருவனாகிலும் அவனிடம் கண்ணனருள் இருக்குமேயானால் ஸர்வகாரியங்களும் நிறைவேறும். ராஜஸூய யாகம் பண்ணமுற்பட்ட தர்மபுத்ரன் யாகம் நிறைவேற உதவும்படி கண்ணனிடம் நாரதரைத் தூது அனுப்பியதாகச் சரித்திரம். ≈தேவரீர் அருளிருந்தால் மிகவுமரிதான இந்த யாகம் எளிதில் முடிந்துவிடும்; அருள்புரிய வேண்டும்∆ என்று தூதனுப்பினானாம்.

**நிச்சித்ய த்வததீநதாம் மயி ஸதா கர்மாத்யுபாயாந் ஹரே!**

**கர்த்தும் த்யக்துமபி ப்ரபத்துமநலம் ஸீதாமி துக்காகுல: |**

**ஏதஜ்ஜ்ஞாநமுபேயுஷோ மம புநஸ்ஸர்வாபராத க்ஷயம்**

**கர்தாஸீதி த்ருடோஸ்மி தே து சரமம் வாக்யம் ஸ்மரந் ஸாரதே: -|| 8**

ஹரே! ஆச்ரிதரின் பாபங்களைப் போக்குமவனே! எல்லாவற்றையும் தன்வசமாக்கிக் கொண்டுள்ள பெருமானே! நான் எப்போதும் உமது அதீநமாக (நீரிட்ட வழக்காக) இருக்கையை உறுதியாகக் கொண்டு (நிச்சயித்து அறிந்து) கர்மயோகம் முதலான உபாயங்களை செயல் படுத்தவோ விடவோ முடியாதவனாய், ப்ரபத்தியை அநுஷ்டிப்பதற்கும் முடியாதவனாய் சோகத்தால் கலங்கினவனாக சோர்ந்திருக்கிறேன். பார்த்தனுக்கு ஸாரதியான உமது இறுதியான பேச்சையறிந்த நான் அதை நினைத்து, இந்த (நீயே உபாயம் என்ற) ஞானத்தை (விச்வாஸத்தை) உடைய எனது எல்லாபாபங்களையும் நீர் நாசம் பண்ணக்கடவீர் என்று உறுதி கொண்டு பயமற்றவனாய் இருக்கிறேன்.

ஹேஹரே! ஆச்ரிதரின் பாபங்களை ஸ்ம்ஹரிப்பவனே! மயிஸதா-என்னிடம் எல்லாக்காலத்திலும்; ஆத்மாவுள்ள வரையில்; த்வததீந: ஸ்வரூபம், ஸ்திதி, ப்ருவருத்தி எல்லாம் உனது அதீனமாக இருக்கையை; அடியேன் இருப்பது, செய்ல்படுவது யாவையும் நீயிட்ட வழக்காயிருக்கையை; உனக்கே பரதந்த்ரனாயிருப்பது என்று கருத்து. நிச்சித்ய-கீதையில் நீ காட்டியுள்ளபடி (18-61, 7-4,5) முதல் பாரா காண்க) நீயே ஸர்வஸ்வாமி என்ற நிச்சயத்துடன்-பெருநம்பிக்கையுடன் திடமாகக் கொண்டு, கர்மாத்யுபாயாந் - கர்ம யோக மென்ன சாஸ்த்திரத்தில் கூறியபடி அஜ்ஞானம் தொலைந்து ஞானம் பெருகும்படி விதிக்கப்பட்ட யஜ்ஞ தாந தபஸ்ஸுக்களான கர்மாக்களை அநுஷ்டிக்கை (நித்ய நைமித்திக கர்மாக்கள் எல்லாமே பகவதாராதனமாம்; இதனால் சித்தசுத்தி ஏற்படுகிறது)

ஜ்ஞநயோகமென்ன, ஆத்மாவைப் பற்றிய சிந்தனம், தெளிவு, ஸாக்ஷாத்காரம்; இதனால் அடையப்பட்ட பக்தியோகமென்ன; பகவானை இடைவிடாமல் நியமத்துடன் மநநம் பண்ணி மனக்கண்ணால் அவனைக் காண்கை ; இந்த பக்தியோகத்துக்கு கர்மயோகமும் ஞானயோகமும் துணை நிற்பவையாம். நித்யநைமித்திக அநுஷ்டானங்கள், அவதாரஹஸ்யஜ்ஞானம், புருஷோத்தமவித்யை, திவ்யதேசவாஸம், நாமஸங்கீர்தநம், திருவிளக்கெறிக்கை, புஷ்பகைங்கர்யம் எல்லாம் கர்மஜ்ஞானங்களில் சேருமவை.

**கர்த்து மநலம் கர்த்துமபி அநலம்**-எல்லாம் உன் அதீனமாகையால், அடியேன் பரதந்த்ரனாகையால், நான் எதைச் செய்வது? செய்வது ஸ்வரூபவிருத்தம்; நானும் செய்வதில் சக்தியற்றவன்; மெய்வருத்திச் செய்ய வேண்டியுள்ளது ; பலச்ரமங்களுள்ளன; அபாயங்கள் பலவுண்டு; மிகவும் தாமதித்தே பலன் தரும்; நீண்டகாலம் அநுஷ்டிக்க வேணும்; தாமே பலன்தர வல்லவையல்ல. இப்படி உபாயாந்தரங்கள் துச்சகமாயுள்ளன, த்யக்துமபி அநலம்-வர்ணாச்ரமங்களுக்குத் தக்க தர்மங்களென்று உனது அஜ்ஞாரூபங்களான சாஸ்த்ரங்கள் விதிக்கையால் எப்படி விடுவது? விட்டால் தோஷம் வருமே, மேலும் இவை உன்னையாராதிக்கும் கைங்கர்யங்களன்றோ? எப்படி விட்டுவிடுவது?

கண்ணன் அர்ஜுனனுக்குப் பலவுபாயங்களையும் விரித்துரைத்து, "உனக்கு சிறந்ததான பலதர்மங்களைச் சொன்னேன்; இவற்றை ஆராய்ந்து பார்த்து உன்னிஷ்டப்படி செய் (யதேச்சஸிததாகுரு" கீதை 18-63) என்றான். "உன்னிஷ்டப்படி" என்றதால் "முன்பு விரும்பியபடி யுத்தத்தை விட்டு ஓடிப்போகலாம்" என்றதாகாது. "நான் சொன்னதையெல்லாம் ஆராய்ந்து பார்த்து எது தகுந்தது என்று தோற்றுகிறதோ அதைச் செய்" என்றான். அர்ஜுனனுக்கு இதனால் பெருங்கலக்கம் உண்டாயிற்று. "யுத்யஸ்வ-யுத்தத்தைச்செய்; "மந்மநாபவ மத்பக்த மத்யாஜீ மாம் நமஸ்குரு" - என்னிடம் பக்தியுடன் என்னைச் சிந்தி; வணங்கு; பூஜை பண்ணு என்று பகவத்வசநம். இவை சேதனனின் யத்நம் (முயற்சி) சக்தி இவற்றின் அடிப்படையாகச் செய்யவேண்டியவை. "நீ ஸர்வாத்மா; ப்ரபஞ்சத்திலுள்ள எல்லாவற்றுக்கும் ஆத்மாவாய் நியமிப்பவனாய் நீ இருப்பதால் எல்லா ப்ரவ்ருத்திகளும் (முயற்சி, செயல்) உன்னுடையதாய் விட்டன, நீ ஆத்மாவாயிருந்து நியமிப்பவன். நான் சரீரமாகையால் நியமிக்கப்படுமதாக இருப்பவன். ஆக, செய்யவேண்டுவதெல்லாம் நீயன்றோ? - இது அர்ஜுனன் மனதில் உண்டான கலக்கம். செய்தல் விடுதல் எல்லாவற்றுக்கும் ஸர்வநியந்தாவான நீயே கடவனாயிருக்க, நான் செய்வதென்றும் விடுவதென்றும் என்ன இருக்கிறது?

"எல்லாம் உன்னதீனம் (நீயிட்டவழக்கு) என்று நிச்சயித்தறிந்த பின் செய்யத்தான் எனக்கென்ன ஸாமர்த்யமுள்ளது. விடத்தான் என்ன ஸாமர்த்யமுள்ளது? ப்ரபத்தி பண்ணத்தான் என்ன ஸாமர்த்யமுள்ளது? **ப்ரபத்துமபி அநலம்**-ப்ரபத்திக்கு முன் சொன்ன-துச்சகத்வம் தாமதித்து பலன்தருகை முதலான குறைகள் கிடையாது. இருந்தாலும் எல்லா தர்மங்களையும் விட்டு விட்டு நீயே ரக்ஷகன் என்ற மஹாவிச்வாஸத்துடன் உன்னைப்பற்றவேணுமே. *மெய்ம்மைப் பெருவார்த்தை விட்டுசித்தர் கேட்டிருப்பர்; பெரியாழ்வார் போன்ற மஹான்களே இவ்விஷயத்தில் திடமான அத்யவஸாயஸாயத்தை உடையவர்கள்.

*"நோற்றநோன்பிலேன், நுண்ணறிவிலேன்; *நதர்ம நிஷ்டோஸ்மி; இதனால் கர்மஜ்ஞானங்கள், தர்மம் எதுவுமே இல்லை என்பதன்று; அந்த நிஷ்டை என்னிடமில்லை-ஊற்றமில்லை. இதனால் நான் கைம்முதலற்றவன். ஏதாவது நன்மையிருக்குமாகில் *உணர்விலும்பரொருவனை என் உணர்விலுள்ளே இருத்தினேன் அதுவுமவதின்னருளே-என்று ஆழ்வார் திருவுள்ளபடி உனதருளடியாக வந்ததாகவே இருக்கவேண்டும். நானாக எதைச் செய்வது எதை விடுவது என்று **துக்காகுல: ஸீதாமி** - சோகத்திலாழ்ந்து கலங்கியவனாய்ச் சோர்ந்து நிற்கிறேன்.

"நான் எல்லாவிதத்திலும் அகிஞ்சநன்-ஒரு கைம்முதலும் (தகுதியும்) இல்லாதவனாகையால் பேறு ஸித்திப்பதெப்படி என்று துக்கத்திலாழ்ந்திருக்கிறேன்" என்று சோகநிமித்தத்தைச் சொல்லி, அது நிவ்ருத்தியாவதற்கு ஹேதுவையும் சொல்லிக்காட்டுகிறான் சேதனன் ச்லோகத்தின் பின்பாதியால் **ஏதத்** என்று தொடங்கி, **ஸாரதே:தே**-வாத்ஸல்யம் முதலான குணங்களின் எழுச்சியினால் அர்ஜுனனுக்குத் தேரோட்டியாக நின்ற பார்த்தஸாரதியாய் நிற்கும் உன்னுடைய; **சரமம் வாக்யம்**-இறுதியான முடிசொற்களை; திருத்தேர்த்தட்டிலிருந்து அர்ஜுனனுக்கு சொன்ன இறுதி வார்த்தையை (ஸர்வதர்மாந்...18-66) **ஸ்மரந்**-நெஞ்சில் கொண்டு; அதை நினைவில் கொண்டு; அக்காரணத்தாலே, **புந:ஏதத்**-மேலும் முன்சொன்ன வாக்யம்; அதாவது நீயே உபாயம் என்ற நிச்சயத்தை **உபேயுஷ:**-உனதருளாலடைந்தவனாய்; **மம**-அறிவிலியாய் அசக்தனாய் எதுவும் செய்யத் தகுதியற்றவனான எனது.

**ஸர்வாபராதக்ஷயம் கர்த்தாஸி**-உன்னையடைவதற்குத் தடையாய் நிற்கும் எல்லா பாபங்களையும் நாசமடையச் செய்யப்போகிறாய்; **இதி நிச்சிதஸ்மி**-என்று திடமாக நம்பி, சுமை கழிந்தவனாய் பயமற்றவனாய் இருக்கிறேன். **ஸர்வாபராதம்**-அவித்யா, கர்மவாஸனா, ருசி, ப்ரக்ருதி ஸம்பந்தம், இவை யடியாக வரும் அஹங்கார மமகாரங்கள் முதலான தோஷங்களென்ன, அவைகளின் விளைவான புண்யபாப ரூபமான கர்மா

(வினைகள்); 'போயபிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும்.' 'தீதொன்றும் அடையா ஏதம் சாராவே என்றவிடங்களில் சொல்லப்பட்டவை. புண்யபாபங்களாவன-ஸர்வேச்வரன் திருவுள்ளத்தில் அநுக்ரஹத்தையும் நிக்ரஹத்தையும் விளைவிப்பவை. அவன் மனதில் நிக்ரஹ சிந்தைபோனால் பாபம் தொலைந்தது. க்ஷமை என்பது இதுவே.

ஸீதாமி, த்ருடோஸ்மி - (கலங்கிச் சோர்வடைகிறேன் ; பயமற்றிருக்கிறேன்) என்றது; தனது நிலையைப் பார்த்தால் கலக்கம், பயம். எம்பெருமானின் குணபூர்த்தி, சக்தி முதலியவைகளைக் கண்டால் பயம் விலகித் தெளிவு பிறக்கும். அஸ்மி-இருக்கிறேன்-என்று நிகழ்காலத்தில் சொல்லுவதால் "மோக்ஷயிஷ்யாமி-மாசுச:". என்ற அவன் வார்த்தையில் நம்பிக்கையால் கலக்கம் தெளிந்தமை தெரிகிறது. ஸ்மரந்-நினைத்துக்கொண்டு என்று வர்த்தமான நிர்தேசத்தால் (நிகழ்காலமாகச் சொல்வது)-இந்த சரமச்லோகத்தினர்த்தத்தை எப்போதும் மனதில் நினைத்து அதுவே காலக்ஷேபமாயிருக்கவேணுமென்பதைக் காட்டும். "உன் வார்த்தையை நம்பியிருக்கிறேன். இதனால் வரும் நலனோ கேடோ அது உன் பொறுப்பு" . என்றபடி.

தனது தோஷங்களை நினைத்தால் பயம்; அவனது குணபூர்த்தியை நினைத்தால் பயமில்லாமை; இவை பலம் ஸித்திக்கும் வரை நமக்கு இருந்து கொண்டேயிருக்கும். விவரண விவரிணிகளான மூன்று ரஹஸ்யங்களின் அர்த்தங்களை நித்யமும் அஸந்தித்து (மீண்டும் மீண்டும் நினைக்கை) காலத்தைக் கடத்த வேண்டும். இதுவே காலக்ஷேபமாகவேண்டும்.

ஸ்ரீபராசரபட்டர் திருவடிகளே சரணம்

நூலாசிரியர் நிகமநம் - முமுக்ஷுவான சேதனனுக்கு அவச்யம் அறிந்து கொள்ள வேண்டிய ரஹஸ்யம் மூன்று-திருமந்தரம், த்வயம், சரமச்லோகம் நாம் அவச்யம் தெரிந்து கொள்ள வேண்டிய மூன்று தத்வம், ஹிதம், புருஷார்த்தமென்பவை. தத்வமாவது ஜீவஸ்வரூபமும் அதன் ஸ்வாமியான பரஸ்வரூபமும். புருஷார்த்தமாவது புருஷன் (ஜீவன்) அர்த்தித்துப் பெறும் பலம் (பயன்). ஹிதமாவது பெறும் உபாயம் (வழி), அம்மூன்றையும் மிகத் தெளிவாக அறிவிப்பது ப்ரதம்ரஹஸ்யமான மூலமந்தரம். இதில் ஓம் என்ற ப்ரணவம் ஸ்வஸ்ருபத்தை நன்கு சோதித்து அறிவிக்கிறது. அதாவது ஜீவனுக்கு அநந்யார்ஹ சேஷத்வமே நிருபகம் என்று. சேஷத்வம் என்றால் யாருக்கு? ஸர்வஸ்வாமியான பரமபுருஷனுக்கு. ப்ரணவத்துக்கு விளக்கமளிப்பது 'நமோ நாராயணாய'. நம: என்பது விரோதிகழிகையையும் உபாயத்தையும் தெரிவிப்பது. நாராயணாய - புருஷார்த்தவாசகம். இதை விசதமாக விளக்குவது த்வயம். இது அநுஷ்டானபரமான மந்த்ரம்.

பிராட்டியுடன் எப்போதும் பிரியாமல் கூடியுள்ள நாராயணனை உபாயமாகப் பற்றி இச்சேர்த்திக்குத் தன்னலமற்ற கைங்கர்யம் பண்ணுவதே பேறு என்று அதை யாசிக்கிறான். சரமச்லோகம் உபாயத்தை விதிக்கிறது. பலபடி சொல்லப்பட்ட உபாயங்களையெல்லாம் விட்டு என்னையே உபாயாமாகப் பற்று. உனது ரக்ஷணம் எனது பொறுப்பு என்று பகவான் நிச்சயித்துச் சொல்லுகிறான்.

ஸ்வஸ்வருபத்தை - நான் யார்? எத்தன்மையன்? என்ற அறிவே மிகமுக்யமானது. இதைத் தெளிவாக உள்ளபடி அறிந்து கொண்டால் மற்றவைகளை அதற்குச் சேர அறிவது எளிதாய்விடும். இக்காரணம் பற்றியே திருமந்த்ரத்தின் அர்த்தம் விரிவாகச் சொல்லப்படுகிறது. எட்டுச்லோகங்களில் நாலு திருமந்த்விளக்கமாயுள்ளது அஷ்டச்லோகியில்.

ஆனால் 'மந்த்ரரத்நம்' என்று த்வயமே போற்றப்படுவது. ராஜனும் விரும்புவது ரத்நம். தன்னை சரணம் பற்றிய எம்பெருமானாருக்கு திருவரங்கன் பணித்தது, "த்வயமர்த்தாநுஸந்தாநேந ஸஹ யாவச்சரீரபாதம் அத்ரைவ ஸ்ரீரங்கே ஸுகமாஸ்வ - நிஸ்ஸம் சய: ஸுகமாஸ்வ என்று, த்வயத்தை அநுஸந்திப்பது அதன் பொருளினிமையில் ஊன்றியிருப்பது இதுவே காலக்ஷேபமாய் (போது போக்காக) அமைய வேணும். இதன் பலன் எம்பெருமான் திறத்தில் ப்ரீதிகாரிதமாகப் பண்ணும் தன்னலம் கலசாத பகவத்தைகங்கர்யம். இதுவேயாவதாயுஷம் நடத்தவேண்டிய பரமபுருஷார்த்தம். தமிழ்மறை என்று போற்றப்படும் திருவாய்மொழியை த்வயார்த்தம், தீர்க்க சரணாகதி என்பர் நம்பெரியோர்.

"திருமந்த்ரத்திலே பிறந்து த்வயத்திலே வளர்ந்து த்வயைக் நிஷ்டராவீர்" என்ற பெரியோர்கள் வாழ்த்தும்படி. முதலில் திருமந்த்ரத்தில் சொல்லப்பட்ட ஸ்வருபத்தைத் தெளிவாக அறியவேணும். த்வயார்த்தாநுபவவே போது போக்காகவேணும். அதுவே வாழ்க்கை நெறியாக அமையவேணும்.

ரஹஸ்யத்ரயவிவரணமாக பிற்காலத்தில் தோன்றிய பூர்வாசார்யக்ரந்தங்களுள் பிள்ளைலோகாசாரியர் அருளிச் செய்த முமுக்ஷுப்படியும் அதற்கு வ்யாக்யானமாக மணவாளமாமுனிகள் அருளியுள்ள திருமந்த்ரார்த்தமுமே உயர்ந்த காலக்ஷேபக்ரந்தங்களாகக் கொள்ளப்பட்டுள்ளன.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்



ஸ்ரீ சுந்தரராஜப் பெருமாள் - திருமாலிருஞ்சோலை

# ஸம்ப்ரதாய ரத்நம், ஸ்ரீவைஷ்ணவ ஸிம்ஹம்



Dr. V.V. ராமாநுஜன்

ஸ்ரீவெங்கடாபுரம் உருப்பட்டூர் ஸ்ரீநிவாஸாசாரியர், ஸ்ரீமதி ரங்கநாயகி அம்மாள் தம்பதியின் மூத்த பிள்ளையாய் ரௌத்ரி ஹ புரட்டாசி மீ (24.9.1920) அன்று பிறந்தார். திருவல்லிக்கேணி ஹிந்து ஹை ஸ்கூல், லயோலா மற்றும் ப்ரெஸிடென்ஸி கல்லூரிகளில் படித்து ரசாயனத் துறையில் முதுநிலைப்பட்டமும் அமெரிக்காவிலுள்ள ட்யுலேன் பல்கலைக்கழகத்தில் ஆராய்ச்சிப்பட்டமும் பெற்று அண்ணாமலை மற்றும் சென்னை பல்கலைக்கழகங்களில் பேராசிரியராக 45 ஆண்டுகள் பணிபுரிந்து ஓய்வு பெற்றார்.

சிறுவயதிலிருந்தே பகவத்கைங்கர்யத்திலும் ஸம்ப்ரதாய அறிவை வளர்த்துக்கொள்வதிலும் ஊக்கம் கொண்டு அருளிச்செயல், உபயுக்த வேதபாகங்கள், பூர்வாசார்ய ஸ்தோத்ரங்கள் (மூலம்) கற்று ஸ்ரீகாஞ்சி ப்ர.ப. அண்ணங்கராசாரிய ஸ்வாமி, ஸ்ரீ காரப்பங்காடு வேங்கடாசார்ய ஸ்வாமி, ஸ்ரீ நல்லான் ராமகிருஷ்ணய்யங்கார் ஸ்வாமி, ஸ்ரீவேளுக்குடி வரதாசார்ய ஸ்வாமி, ஸ்ரீதிருநாராயணபுரம் சதாபிஷேகம் ஸ்வாமி முதலான பேரறிஞர்கள் திருவடிகளில் பணிந்து ஸ்ரீவைஷ்ணவ க்ரந்தங்களை வரியடைவே அறியக்கற்று வல்லவரானார்.

கடந்த 24 ஆண்டுகாலமாக யதிராஜ பாதுகா எனும் ஸ்ரீவைஷ்ணவ மாத இதழை ஆசிரியராக இருந்து நடத்திவரும் ஸ்ரீராமாநுஜன் பல நூற்றுக்கணக்கான ஸம்ப்ரதாயக் கட்டுரைகளை எழுதியுள்ளார். பல சிறப்பு மலர்களைப் புதிப்பித்துள்ள இவர் யதீந்த்ரப்ரவணப்ரபாவம் எனும் பூர்வாசார்ய க்ரந்தத்தை சுமார் ஒரு நூற்றாண்டு காலத்துக்குப் பின் முதலாக 1992 ல் பதிப்பித்து வெளியிட்டார். ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ர நாம விளக்கவுரை, கத்யத்ரய விரிவுரை (ஆங்கிலம்), பகவத் கீதாஸாரம், சிறையிருந்தவளேற்றம், ஸ்ரீ பார்த்தசாரதி திருக்கோளூரம்மாள் திருவல்லிக்கேணியம்மாள் ரகஸியங்கள் விவரணம், மற்றும் பல நூல்களையும் தாமேயெழுதி வெளியிட்டுள்ளார்.

ப்ரவசனப்பணியிலும் - உபந்யாஸங்கள், க்ரந்தகாலக்ஷேபங்கள்

- ஆர்வத்துடன் ஈடுபட்டு வருகிறார்.